# சிவன்

## அருள் திரட்டு

இணைப்பு

# Sivan Arul Thirattu

SUPPLEMENT







டால் தமிழ் வைதீக சபை

Natal Tamil Vedic Society

# சிவன்

# அருள் திரட்டு

— இணைப்பு —

தேவாரம் திருவாசகம்

★

# Sivan Arul Thirattu

— SUPPLEMENT —

★

Selected Songs in Thevaram and Thiruvasagam
with Transliteration
by

K. M. GOPINATH *B. Sc.*,

★

and

Tamil paraphrase, Notes and rendering into English
by

K. M. VENKATARAMIAH *M. A.*,

★

நெட்டால் தமிழ் வைதீக சபை
Natal Tamil Vedic Society

## பதிப்புரை

தமிழும் சைவமும் நம்மவரிடையே நன்கு வளர நெட்டால் தமிழ் வைதீக சபை செய்து வரும் பணிகள் பல.

நால்வர் வரலாற்றைப் படங்களுடன், நம்நாட்டில் பழக்கத்தில் உள்ள நால்வர் பாடல்கள் பலவற்றை ஆங்கில ஒலியுடன் (Transliteration) "நால்வர் திருமுறைத் திரட்டு" என்ற நூலை வெளியிட்டோம். பின்னர் இளஞ்சிறுர்களும் தமிழ் மொழியைக் கற்பதற்கு வழிசெய்யும் வகையில் நால்வர் திருமுறைத் திரட்டில் வெளியிடப்பட்ட பல பாடல்களுக்கும் தமிழ், ஆங்கில உரைகளுடன் அருஞ்சொற் பொருளும் தந்து அவற்றுடன் திருப்புகழ், திருவருட்பா பாடல்களில் சிலவற்றையும் சேர்த்து "சிவன் அருள் திரட்டு" என்ற நூலை வெளியிட்டோம்.

நமது நால்வர் திருமுறைத் திரட்டில் வெளியிடப்பட்டு, சிவன் அருள் திரட்டில் விடுபட்ட நால்வர் பாடல்கட்குத் தமிழ் ஆங்கில உரைகளுடனும் அருஞ்சொற் பொருளுடனும், வழக்கம் போல் பாடல்கட்கு ஆங்கில ஒலிக்குறிப்புடனும் (Transliteration) இந் நூல் வெளியிடப் படுகிறது.

தமிழோடு இசைபாடல் மறவாத நம் சைவத் தமிழ் அன்பர்கட்கு இந்நூல் ஒரு தேனூறும் அமிழ்தம் ஆகும். சுவைத்துப் பயன் பெற வேண்டுகிறேன்.

இந்நூலுக்கு உரைவிளக்கம் அளித்த சிவநெறிச் செல்வர், திரு. கே. எம். வேங்கடராமையா M. A. அவர்கட்கும் பாடல்கட்கு ஆங்கில ஆக்கம் (Transliteration) செய்து தந்த திரு. கே. எம். கோபிநாத் B. Sc. அவர்கட்கும், நூல் சிறப்புற வெளிவர உதவி செய்த தமிழாசிரியர் வித்துவான் திரு கே. எம். கிருஷ்ணமூர்த்தி அவர்கட்கும் நமது நன்றிகள். சிறப்பாக திரு. என். சி நாயுடு அவர்கட்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறேம். அவர்களுக்கும் சிவனருள் சிறக்க.

சி.ஜி. செட்டி

தலைவர்

நெட்டால் தமிழ் வைதீக சபை

## FOREWORD

When the NATAL TAMIL VEDIC SOCIETY first published the NAALVAR THIRUMARAI THIRATTU, it felt that it was advancing for more spiritual knowledge. To advance in parallel with that speed, the Society felt that it should be fed with lots and lots of spiritual diets. So, it is the sincere belief of Thiru K. M. Venkataramiah, the author of our "Sivan Arul Thirattu", that this supplement volume will help those people who want to know more about our religion, to grow more in our spiritual life and to move close with the Divine Power.

**Siva Neri Chelvar** Thiru **K.M. Venkataramiah** M.A., a learned Tamil scholar with a rich knowledge of our religious thought, was kind enough to pour out his thoughts, as he had done in the "Sivan Arul Thirattu", in this supplementary volume too. A God-chosen man has taken all the pains with pleasure to dilute the spiritual diet so that it will be easy to grasp and digest with the same spiritual inspiration. His son, **Vidvan Thiru K. M. Krishnamurthy** (Tamil Pandit), keeps well with the scholarship from his father and he is the real push-back for all the works which have been done for this supplementary volume, as well as the Sivan Arul Thirattu. Interestingly enough, his son Thiru **K. M. Gopinath** B.Sc, also keeps up the tradition of their family in offering their talents for the Divine service. It is appreciated that the transliteration has been once again done by his able hands.

Some of the songs from the Naalvar Thirumurai Thirattu were not included in the first edition of the Sivan Arul Thirattu. Now I am very happy that all those songs left out in the first

edition, have now taken a very good shape in this supplementary volume. It is really a pleasure that this supplement will be merged in the Second Edition of the Sivan Arul Thirattu which will be sponsored by Muththamizh Kavalar Polachi Thiru N. Mahalingam B. Sc., .F.I.E, the Head of the Ramalinga Mission of Tamil Nadu, for the Natal Tamil Vedic Society.

It is the earnest prayer of the Natal Tamil Vedic Society that the Grace of Thiruchittrambalam (திருச்சிற்றம்பலம்) will always guide our people in the everlasting path of peace, prosperity and Divine love.

Chairman N.C. NAIDOO

NATAL TAMIL VEDIC SOCIETY
(Provincial Body)

## நால்வர் வணக்கம்

### திருச்சிற்றம்பலம்

பூழியர்கோன் வெப்பு ஒழித்த புகலியர்கோன் கழல்போற்றி!
Pūzhiyarkōn veppu ozhiththa pugaliyaar kōn kazhal pōtri

ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி!
aazhimisaik kalmidhappil annaindha piraan adi pōtri

வாழி திரு நாவலூர் வன்தொண்டர் பதம் போற்றி!
Vaazhi thiru naavalūr vanthonndar padham pōtri

ஊழிமலி திருவாத வூரர் திருத்தாள் போற்றி!
Ozhimali Thiruvaadhavūrar thiruththaall pōtri

### திருச்சிற்றம்பலம்

பாண்டிய அரசன் ஆகிய நெடுமாறனின் வெப்பு நோயைப் போக்கி அருளிய சம்பந்தருடைய திருவடிகளைப் போற்றுகிறேன்.

கடலில் கல்ஆகிய தெப்பத்தில் மிதந்து கரைசேர்ந்த திருநாவுக்கரசருடைய திருவடிகளைப் போற்றுகிறேன்.

திருநாவலூரில் பிறந்தவரும் வன்றொண்டர் எனப் பெற்றவரும் ஆகிய சுந்தரரது திருவடிகளைப் போற்றுகிறேன்.

ஊழிக்கால முடிவிலும் நிலைபெறும் (புகழ் உடைய) திருவாதவூர் எனும் தலத்தில் பிறந்த மாணிக்கவாசகருடைய திருவடிகளைப் போற்றுகிறேன்.

பூழியர்கோன்—பூழி நாட்டுக்கு அரசன்—பாண்டியன்; the King of Puzhi country—the Pandya King.

பூழி—செந்தமிழ் நிலம் சேர்ந்த 12 நாடுகளில் ஒன்று; தென் திருவாங்கூர்ப்பகுதி— This is one of the 12 terrains surrounding the Senthamizh country—South Travancore

வெப்பு—colic fever

ஒழித்த—cured

புகலியர்கோன்—புகலி என்ற சீர்காழிக்குத்தலைவன் —திருஞானசம்பந்தர்—the King of Pugali viz. Sirkazhi.

கழல்—வீரக்கழல்—திருவடி— anklet—feet

போற்றி—I adore

ஆழி—sea

மிசை—over

கல்மிதப்பு—கல் ஆகிய தெப்பம்—using the stone as float

அணைந்த—who came

பிரான்—தலைவன்—சம்பந்தர்—Lord—Sambanthan

அடி—feet வாழி—expletive

திருநாவலூர்—the place of Sundarar

வன்றொண்டர்—As Sundarar used harsh words against the Lord, he was conferred the title Vanthondar by Lord.

பதம்—feet ஊழி—Aeon

திருவாதவூரர்—திருவாதவூரில் பிறந்த மாணிக்கவாசகர்—Manickkavasagar born at Thiruvathavūr.

திருத்தாள்—holy feet.

I adore the anklet feet of the King of Pugali (Sirkazhi) Sambandar who cured the fever of the king of Puzhi Nadu—the Pandya king—Nedumaran.

I adore the feet of the Lord who reached the sea-shore by using the stone as a float!

I adore the feet of Vanthondar of Thiru Navalur—Sundarar!

I adore the holy feet of Mannickavasagar of Thiruvathavur!

திருச்சிற்றம்பலம்

சித்திரைச் சதயம் அப்பர்; சிறந்த வைகாசி மூலம்
Chiththiraich chadhayam appar sirrandha vaigaasi mulam
அத்தரைப்பணி சம்பந்தர்; ஆனிமா மகத்தில் அந்த
aththaraip panni sambandar aanimaa magaththil andha
முத்தமிழ் வாத ஊரர்; முதிய நல் ஆடி தன்னில்
Muththamizh vaadhavūrar mudhipa nal aadi thannil
சுத்தமாம் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்
suththamaam sodhi naallil Sundarar kayilai sērndaar

திருச்சிற்றம்பலம்

சித்திரை மாதம் சதய நாளில் அப்பர் கயிலை அடைந்தார்;

சிறப்பு உடைய வைகாசி மாதம் மூல நாளில் இறைவனைப் பணிகிற சம்பந்தர் கயிலை அடைந்தார்;

ஆனி மாதத்தில் மகநாளில் முத்தமிழ் வல்ல வாதவூரர் ஆகிய மாணிக்கவாசகர் கயிலை அடைந்தார்;

தூய்மையான ஆடி மாதத்தில் சுவாதி நாளில் சுந்தரர் கயிலை அடைந்தார்.

சித்திரை—Tamil month Chiththirai, corresponding to April—May
சதயம்—Star Sathabhisham
அப்பர்—Thirunavukkarasar
வைகாசி—Tamil month Vaisaka—corresponding to May—June
மூலம்—Star Mula
அத்தர்—Lord
ஆனி—Tamil month Ani—corresponding to June—July
மகம்—Star Makha
முத்தமிழ்—The Three parts of Tamizh—இயல் இசை நாடகம் —Literature, Music and Drama.
வாதவூரர்—Mannickavasagar—born in Thiruvathavur.
முதிய—முதிர்ந்த—ripe
நல்—நல்ல—good
ஆடிதன்னில்—in the month of the Tamil month Adi—corresponding to July—August
சுத்தம்—தூய்மை—pure
சோதி—Star Swathi
நாள்—day
கயிலை சேர்ந்தார்—arrived at Kailas

Thiru Navukkarasar reached Kailas on the Sathayam day in the month of chiththirai;

Sambandar who bows before the Lord, reached Kailas on the Mulam day in the month of Vaisaka;

Vathavurar, is Mannickavasagar, well versed in the three aspects of Tamizh reached Kailas on the Makha day in the month of Ani;

Sundarar reached Kailas on the pure Swathiday in the month of Adi!

# திருஞானசம்பந்தர்

திருநெல்வாயில்

திருச்சிற்றம்பலம்

எந்தை ஈசன் எம்பெருமான் ஏறுஅமர் கடவுள் என்று ஏத்திச்
Endhai eesan emperumaan ēruamar kadavull endru ēththich
சிந்தை செய்பவர்க்கு அல்லால் சென்று கைகூடுவது அன்றால்
sindhai seybavarkku allaal sendru kaikūduvadhu andraal
கந்த மாமலர் உந்திக் கடும்புனல் நீவா மல்கு கரைமேல்
kandha maamalar undhik kadumpunal neevaa malgu karaimē
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை அடிகள் தம் அருளே
Andhann sōlai nelvaayil araththurrai adigall tham arullē

''என் தந்தையே! ஈசனே! எமது பெருமானே! எருது வாகனத்தில் அமர்ந்த கடவுளே!'' என்று மனத்தில் நினைப்பவர்க்குத் (திருவருள்) கிடைக்கும். மற்றவர்களுக்குக் கிடைக்காது. வாசனை உடைய மலர்களைத் தள்ளிக்கொண்டு பெருவெள்ளம் பொருந்தியது நிவா என்ற ஆறு; அதன் கரைமேல் குளிர்ந்த சோலைகள் சூழ இருப்பது நெல்வாயில்; அங்கு இருக்கும் கோயில் அரத்துறை; அக் கோயிலில் உள்ள இறைவனின் திருவருள்.

எந்தை—என் தந்தை—my Heavenly Father
ஈசன்—Supreme Being; Lord
எம்பெருமான்—my Lord
ஏறு—Bull
அமர்—இருத்தல்—to sit
கடவுள்—God
என்று—so
ஏத்தி—worship
சிந்தைசெய்பவர்—மனத்தில் நினைப்பவர்—those who entertain in the mind
அல்லால்—but for (them)
கைகூடுவது—கிடைப்பது; to attain
அன்று—not (possible)
கந்தம்—fragrance
மலர்—flower
உந்து—தள்ளு; to push
கடும்புனல்—heavy floods

நிவா— Niva; the name of a river
அம்—அழகிய—beautiful தண்—cool
சோலை—grove நெல்வாயில்—name of place
அரத்துறை—name of Temple at Nelvāyil
அடிகள்—Lord அருள்—grace

'Oh my Father! Oh the Supreme Being! Oh my Lord seated on a bull!"—so worship and entertain the Lord in the mind. Only to those (grace) is conferred. For the other it is not. On the bank of the River. Nivā, full of floods dashing the fragrant flowers, is Nelvayil surrounded by beautiful groves. In the Temple called Araththurrai is the Lord to confer grace.

கரையினார் பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம்பந்தன்
karaiyinaar pozhil sūzhndha kaazhiyull Gnana sambanthan
அறையும் பூம்புனல் பரந்த அரத்துறை அடிகள் தம் அருளை
arraiyum pūmpunal parandha araththurrai adigall tham arullai
முறைமையால் சொன்ன பாடல் மொழியும் மாந்தர் தம் வினைபோய்ப்
murraimaiyaal sonna paadal mozhiyum maandhar tham vinaipōyp
பறையும் ஐயுறவு இல்லைப் பாட்டு இவை பத்தும் வல்லார்க்கே
parraiyum aiyurravu illaip paattu ivai paththum vallaarkkē.

திருச்சிற்றம்பலம்

ஆற்றங்கரையில் பொழில்கள் உள்ளன; ஆற்றுவெள்ளம் எங்கும் பரவி உள்ளது. அரத்துறை பொழில்கள் சூழ்ந்தது. சீர்காழியுள் உள்ள ஞானசம்பந்தன் அரத்துறையில் உள்ள கடவுளை முறைமையாகப் பாடியுள்ளார். அப்பாடல்களைப் பாடுபவரின் வினைகள் நீங்கும்; இதில் சந்தேகம் இல்லை, இப்பாடல்கள் பத்தும் படித்தவர்க்கு.

கரை—bank (of the river) பொழில்—grove
சூழ்ந்த—surrounded by காழி—சீர்காழி—seerkazhi
அறையும்—to make noise புனல்—water
அரத்துறை அடிகள்—the Lord enshrined in Araththurrai
அருள்—grace முறைமையால்—perfectly
சொன்ன -told; improvised பாடல்—verse

மாந்தர்—people
பறையும்—vanish
பாட்டு—verses
வினை—(good and evil) deeds
ஐயுறவு——doubt
வல்லார்—well versed

There are groves on the banks of the river which is flooded. Araththurrai is surrounded by the groves and sheet of water. Gnana Sambandhan of Seerkazhi has sung on the grace of the Lord in perfection. The effects of the (evil and good) deeds of those who recite the verses will vanish. Undoubtedly it is so with those who are well versed in those ten verses.

திருச்சிற்றம்பலம்

துஞ்சலும் துஞ்சல் இலாத போழ்தினும்
thunjalum thunjal ilaadha pozhdhinum
நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்
Nenjagam naindhu ninaimin naalldhorrum
வஞ்சகம் அற்று அடி வாழ்த்த வந்த கூற்று
vanjagam atru adi vaazhththa vandha kūtru
அஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே.
Anja udhaiththana anjezhuththumē.

தூங்கிக்கொண்டிருந்தபொழுதும், தூங்காமல் விழித்திருக்கும் பொழுதும் மனம் கரைந்து நாள்தோறும் நினையுங்கள். வஞ்சகம் இல்லாமல் (மார்க்கண்டேயன்) திருவடியை வாழ்த்த (அவன் உயிரைக் கொண்டு செல்ல) வந்த யமனை அவன் பயப்படுமாறு உதைத்தன (பஞ்சாக்கரம் ஆகிய) திருவைந்தெழுத்து.

துஞ்சல்—தூங்குதல்—sleeping (state)
துஞ்சல் இலாத போழ்து—தூங்காத நேரம்—waking state
நெஞ்சகம்—மனம்—mind
நைந்து—கரைந்து—melting
நினைமின்—think (worship)
நாள்தொறும்—daily
வஞ்சகம்—deceit
அடி—feet
வாழ்த்த—adored
வந்த—came
கூற்று—Yama the God of death
அஞ்ச—to fear
உதைத்தன—kicked—spurned
அஞ்செழுத்து—திருவைந்தெழுத்து—சிவயநம the mystic five letters—the Panchakshara—Si Va Ya Na Ma is the name of the Lord.

Whether in the sleeping state or in the waking state,— your mind melting—Worship the Lord daily. Without deceit (i.e. with faith, Markkandeya) adored the feet (of the Lord) and Yama, the God of Death to fear, the Panchakchara spurned him.

மந்திரம் நான்மறை ஆகி வானவர்
mandhiram naanmarrai aagi vaanavar
சிந்தையுள் நின்று அவர் தம்மை ஆள்வன
sindhaiyull nindru avar thammai aallvana
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு
sendhazhal ombiya semmai vedhiyarkku
அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே
andhiyull mandhiram anjezhuththume

மந்திரம் ஆவது; நான்கு வேதங்கள் ஆக இருப்பது; தேவர்களின் மனத்தில் இருப்பது; அந்தத் தேவர்களை ஆள்வது; நெருப்பை வளர்த்தல் ஆகிய சடங்கை நாடோறும் செய்யும் தூய அந்தணர்க்கு மாலையில் சபம் செய்யும் மந்திரம் ஆவது திருவைந்தெழுத்து ஆகும்.

மந்திரம்—sacred formula of invocation of a deity.
நான்மறை—நான்கு வேதங்கள்—the four Vedas
வானவர்—the celestials
சிந்தை—mind
ஆள்வன—to grace.
செந்தழல்—sacred fire
ஓம்பிய—rear
செம்மை—pure; eminent
வேதியர்—வேதம் வல்லவர்—well versed in Vedas—
அந்தி—மாலை—evening

It is the mantra. It is the four Vedas. It remains in the minds of celestials and graces them. To the eminent Brahmins well versed in Vedas who rear the "fires", the mantra for the evening is the Panchākshara.

ஊனில் உயிர்ப்பை ஒடுக்கி ஒண்சுடர்
Ūnil uyirppai odukki onnsudar
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்(து)
Gnaana vilakkinai etri nanpulaththu

ஏனை வழி திறந்து ஏத்துவார்க்(கு) இடர்
Enai vazhi thirrandhu ēththuvaarkku idar
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே.
aana keduppana anjezhuththumē.

திருச்சிற்றம்பலம்

உடம்பில் மூச்சை அடக்கி, ஒளி பொருந்திய ஞானம் ஆகிய விளக்கை ஏற்றி, உச்சியில் வேறு வழியைத் திறந்து வழிபடுபவர்க்கு, துன்பங்களைக் கெடுக்கும் திருவைந்தெழுத்து.

ஊன்—உடம்பு—body
உயிர்ப்பு—மூச்சு—breath
ஒடுக்கி—அடக்கி—control
ஒண்—bright
ஞானவிளக்கு—the lamp of wisdom
சுடர்—lustre
ஏற்றி—lighting
நன்புலம்—உச்சி—skull; cranium
ஏனை—வேறு—the other
வழி—way
திறந்து—to open
ஏத்துவார்—those who worship
இடர்—difficulties
கெடுப்பன—destroy

Control the breath within the body; Light the bright lustrous lamp of wisdom; Open a separate way at the skull and adore. The Panchākshara will destroy the afflications.

திருப்பிரமபுரம்

திருச்சிற்றம்பலம்

உற்று உமை சேர்வது மெய்யினையே
utru umai sēruvadhu meyyinaiyē
உணர்வது நின் அருள் மெய்யினையே
unnarvadhu nin arull meyyinaiyē
கற்றவர் காய்வது காமனையே
katravar kaayvadhu kamanaiyē
கனல்விழி காய்வது காமனையே
kanalvizhi kaayvadhu kaamanaiyē
அற்றம் மறைப்பதும் உன்பணியே
atram marrippadhum un panniyē
அமரர்கள் செய்வதும் உன் பணியே
amarargall seyvadhum un panniyē

பெற்றும் உகந்தது கந்தனையே
petrum ugandhadhu kandhanaiyē
பிரம புரத்தை உகந்தனையே.
Brama puraththai ugandhanaiyē.

உமை பொருந்தி இருப்பது உன் உடம்பில் ஒரு பாதியையே. (அடியார்கள்) அறிவது உனது உண்மையான அருளையே.

படித்தவர் வெறுப்பது காக்கும்படியான இந்த உடம்பையே. நெற்றிக்கண் எரிப்பது மன்மதனையே.

என் குற்றங்களை மறைப்பது உன்வேலை ஆகும். தேவர்கள் செய்வதும் உன் ஏவல்களையே.

நீ பெற்று மகிழ்ந்தது முருகனையே. நீ விரும்புவதும் பிரமபுரம் என்னும் சீகாழியே.

உற்று—to go
சேர்வது—to be
மெய்—body
உணர்வது—to experience
நின்—your
அருள்—grace
மெய்—truth
கற்றவர்—the learned
காய்வது—to regard with aversion
கா—protect
மனை—house—the body
காமன்—மன்மதன்; Manmatha; cupid
கனல்—fire
விழி—eye
காய்வது—to burn
அற்றம்—evildeeds
மறைப்பது—to conceal
பணி—duty
அமரர்கள்—தேவர்கள்—celestials
செய்வது—to do
பணி—errand
பெற்று—begot
உகந்தது—rejoice
கந்தன்—முருகன்—Skantha, Muruga
பிரமபுரம்—seerkazi
உகந்தனை—liked

Uma stations herself in one part of your body. (The devotees) experience your veracious grace.

The learned regard with aversion the body they protect. Your fire-eye burnt the cupid.

Your gracious act is to conceal the evil deeds (of the soul) The celestials do what you bid.

You begot KANTHAN with rejoice; you like (to reside at) Bramapuram,

பருமதில் மதுரைமன் அவை எதிரே
Parumadhil madhuraiman avai edhirē
பதிகமது எழுது இலை அவை எதிரே
padhigamadhu ezhudhu ilai avai edhirē
வருநதி இடை மிசை வருகரனே
varunadhi idai misai varukaranē
வசையொடும் அலர்கெட அருகு அரனே
vasaiyodum alarkeda arugu aranē
கருதல் இல் இசை முரல்தரும் அருளே
karudhal il isai muraltharum arulē
கழுமலம் அமர் இறை தரும் அருளே
kazhumalam amar irrai tharum arullē
மருவிய தமிழ்விரகன மொழியே
maruviya Thamizhviragana Mozhiyē
வல்லவர் தம்இடம் திடம் ஒழியே.
vallavar tham idar dhidam ozhiyē.

திருச்சிற்றம்பலம்

பருத்த மதில்களை உடையது மதுரை. அம்மதுரையின் அரசன் முன்னிலையில், ஒரு பதிகம், ஓலையில் எழுதிச் சபையினர் முன்னே (வைகை) நதியில் இடப்பட்டது. (வெள்ளத்தில் போகாமல்) அதனைக் கையில் ஏந்தியவனே!

குற்றம் பொருந்திய பொய்யுரை கெடுமாறு அருகர்களை அழித்தவனே. விவரிக்க முடியாத இசை ஒலிக்கும் அருள் வடிவம் ஆனவனே.

கழுமலம் எனும் சீகாழியில் வீற்றிருக்கிரும் இறைவன். அவ்இறைவன் அருள்பெற்றவர் தமிழ் விரகன் (என்னும் சம்பந்தர்) இவர் பாடிய பாடல்களை வல்லவர்களுடைய தீவினை நீங்குவது உறுதி.

பருமதில் – strong enclosure
மன்—king
மன்அவை—court of the king
எதிர்—before
பதிகம்—pathigam—ten verses
எழுதி—write
வரு—flowing
நதிஇடை—in the river
மிசை – on

வரு—to come
கரம்—hand
வசை—faulty
அலர்—idle talk, rumour
அருகு—அருகர்—ஜைனர்—the Jains
அரன்—அழிப்பவன்—destroyer
இசை—music
முரல் தரும்—to sing
அருள்—grace
கழுமலம்—சீர்காழி Kazhumalam is yet another name of Seerkāzhi
அமர்—reside
இறை—Lord
அருள் மருவிய—blessed
தமிழ் விரகன்— one proficient in Tamil.
மொழி—word; here verses
இடர்—affliction
ஒழி—will cease.
திடம்—sure

Madhurai is surrounded by strong enclosure. There in the royal presnce, a pathigam, written on palm leaf, was placed in the river (Vaigai). Oh Lord who held it in your hand!

Curbing the idle talk of the Jains, You destroyed them. Oh Lord the incarnation of grace with music that cannot be described.

Sambandhar was blessed by the Lord of Kazhumalam (Seerkazhi). He is proficient in Tamil. If well versed in his verses, their afflictions will surely cease.

திருநெய்த்தானம்

திருச்சிற்றம்பலம்

மை ஆடிய கண்டன் மலைமகள் பாகமது உடையான்
mai aadiya kandan malaimagall baagamadhu udaiyaan
கை ஆடிய கேடில் கரி உரி மூடிய ஒருவன்
kai aadiya kēdil kari uri mūdiya oruvan
செய் ஆடிய குவளைம்மலர் நயனத்தவளோடும்
sey aadiya kuvallaimmalar nayanaththavallōdum
நெய் ஆடிய பெருமான் இடம் நெய்த்தானம் எனீரே.
ney aadiya perumaan idam neyththaanam eneerē.

கருமை நிறம் பொருந்திய கண்டத்தை உடையவன்! உமையை ஒரு பாகத்தில் உடையவன்; கேடு இல்லாதவன்; யானைத் தோலைப் போர்த்திக் கொண்டவன்; ஒப்பு இல்லாதவன்; வயல்களில் அசையும் குவளை மலர் போன்ற கண்களை உடையவள் உமை—அவ்வுமையோடு நெய் ஆடிய பெருமான்; அச்சிவ பெருமானுடைய இடம் திருநெய்த்தானம் என்று சொல்வீராக.

மை ஆடிய கண்டன்—black throated (lord)
மை—black (poison) கண்டம்—throat
மலைமகள்—the daughter of the mountain Himavān—Uma
பாகம்—part
கை—trunk
ஆடிய—moving
கேடில்—அழியாத—indestructible
கரி—elephant
உரி—skin
மூடிய—covered
ஒருவன்—without an equal
செய்—field
மலர்—flower
நயனம்—eyes
அவளோடு—with her (Uma)
நெய் ஆடிய—anointed
பெருமான்—Lord
எனீர்—please tell

He is black throated. He has Uma, the daughter of Himavan, in one part of His body. He is an incomparable and indestructible One who peeled and covered Himself with the skin of the elephant. With Uma, who has eyes like the KUVALAI flowers, He anointed Himself. His place is Neyththānam. Please tell so.

திருச்சிற்றம்பலம்

தலம் மல்கிய புனல் காழியுள் ஞானசம்பந்தன்
thalam malgiya punalkazhiyull Gnaanasambandhan
நிலம் மல்கிய புகழான் மிகு நெய்த்தானனை நிகர்இல்
Nilam malgiya pughazhaan migu neyththaananai nigar il
பலம் மல்கிய பாடல் இவை பத்தும் மிக வல்லார்
palammalgiya paadal ivai paththum miga vallaar
சில மல்கிய செல்வன் அடி சேர்வர் சிவகதியே.
sila malgiya selvan adi sērvar sira gathiyē.

நீர் நிறைந்த சீர்காழி என்னும் தலத்தில் (உள்ளவர்) ஞான சம்பந்தர். உலகில் புகழ் மிகுந்த திருநெய்த்தானத்தில் உள்ள இறைவனை ஒப்பு இல்லாத பயன் மிகுந்த பாடல்களால் (பாடி உள்ளார்). இப்பாடல்கள் பத்தினையும் அறிந்தவர் முத்திச் செல்வத்தை அளிக்கும் சிவபெருமானுடைய திருவடி அடைவர்; சிவகதி பெறுவர்.

புனல் மல்கிய—water in plenty

புகழ்—fame

நிலம்—earth

நெய்த்தானன்—Lord of Neyththanam

Neyththanam is the name of a place.

நிகர்இல்—without an equal

பலம்—result

பாடல்—verses

வல்லார்—well versed

செல்வன்—Lord

அடி—feet

சேர்வர்—attain (will arrive at)

Seerkazhi is surroı nded by waters. Gnanasambandar has sung verses—without an equal on the Lord of Neyththanam who is famous on the earth. These ten verses yield good results. Those well-versed in them will atta·n the feet of the Lord and obtain Siva Bliss.

திருத்தருமபுரம்

திருச்சிற்றம்பலம்

மாதர் மடப்பிடியும் மட அன்னமும் அன்னதோர்
maadhar madappidiyum mada annamum annadhor

நடை உடைம் மலைமகள் துணை என மகிழ்வர்
nadai udaim malaimagall thunnai ena magizhvar

பூத இனப்படை நின்று இசை பாடவும் ஆடுவர்
Bûtha inappadai nindru isai paadavum aaduvar

அவர் படர் சடைந் நெடு முடியதோர் புனலர்
avar padar sadain nedu mudiyathor punalar

வேதமொடு ஏழிசை பாடுவர் ஆழ்கடல் வெண்திரை
Vēdhamodu Ēzhisai paaduvar aazhkadal venn thirai

இரைந் நுரை கரை பொருது விம்மி நின்று அயலே
irain nurai karai porudhu vimmi nindru ayalē

தாது அவிழ் புன்னை தயங்கு மலர்ச்சிறை வ ண்டு அறை
thaadhu avizh punnai thayungu malarchchirrai vanndu arrai
எழில் பொழில் குயில் பயில் தருமபுரம் பதியே.
Ezhil pozhil kuyil payil tharumapuram padhiyē.

அழகிய மடமை பொருந்திய பெண் யானையைப் போன்றவள்; பெண் அன்னம் போன்ற சிறந்த நடையை உடையவள் ஆகிய உமையை தனக்குத் துணை என்று மகிழ்ச்சி அடைவார்.

பூதங்களின் கூட்டம் ஆகிய சேனை நின்று இசைபாட ஆடுவார்; அவர் பரவிய சடையாகிய நீண்ட முடியில் கங்கையை உடையவர்.

வேதத்தோடு ஏழிசைகளையும் பாடுவர். (அவர் யார் எனில்)

அவர் தருமபுரம் எனும் தலத்துக்குத் தலைவர். (அத்தரும புரத்தில்) ஆழமான கடலில் வெண்மையான அலைகள் ஒலித்து நுரையைக் கரையில் மோதி எழும்; அதன் பக்கத்தில் மகரந்தம் சிந்தும் புன்னைமரத்தின் மலர்களில் சிறகை உடைய வண்டுகள் ஒலிக்கும்; அழகிய சோலைகளில் குயில்கள் தங்கி இருக்கும்.

மாதர்—அழகு—beautiful
பிடி—female elephant
அன்னது—likeness
நடை—gait
மலைமகள்—Uma, daughter of the mountain, Himavan.
துணை—மனைவி—wife
மகிழ்வர்—will enjoy
பூதப்படை—a battalion of demons
இனம்—sort
படர்—spreading
இசைபாட—to sing
சடை—matted locks
நெடி முடியது—in the big tuft
புனல்—water—Ganges
ஏழிசை—the seven kinds of music
இரை—sounding
ஆழ்கடல்—deep sea
கரை—shore
பொருது—dashing
விம்மிநின்று—to rise high
அயல்—by the side of
தாது—pollen
சிறை—wings
வண்டு—bees
அறை—humming
எழில்—beautiful
பொழில்—groves
குயில்—cukkoo
பயில் -living
தருமபுரம்—a place near Karaikkal.

She has the gait of the beautiful female elephant and the female of a mythical bird called Annam (அன்னம்). She is Uma,

the daughter of Himavan. The Lord feels glad to have her as His companion.

The battalion of demons sing surrounding the Lord and the Lord dances. He holds the Ganges in his spreaded matted locks.

He sings the Vedas along with the seven notes of the gamut.

He is the Lord of Dharmapuram. There in the deep sea the waves dash against the shore. By its side, in the punnai tree, the flowers scatter pollen on which the bees hum. The cukkoos live in the groves.

பொன் நெடு மணி மாளிகை சூழ் விழவும் மலி
Pon nedu manni maalligai sūzh vizhavum mali
பொரூஉ புனல் திரூஉ அமர் புகலீ என்று உலகில்
Porū punal thirū amar pugalvee endru ulagil
தன்னொடு நேர் பிற இல் பதி ஞானசம்பந்தனஃ
thannodu nēr pirra il pathi Gnanasambandhanஃ
து செந்தமிழ்த் தடங்கடல் தருபுரம் பதியைப்
Dhu senthamizhth thadangkadal tharupuram pathiyaip
பின் நெடு வார் சடையில் பிறையும் அரவும் உடை
pin nedu vaar sadaiyil pirraiyum aravum udai
யவன் பிணை துணை கழல்கள் பேணுதல் உரியார்
yavan pinnai thunnai kazhagall pēnnudhal uriyaar
இன்நெடு நன்னுலகு எய்துவர் எய்திய போகமும்
innedu nannulagu eydhuvar eydhiya bogamum
உறுவர்கள் இடர் பிணி துயர் அணைவ்விலரே.
Urruvargall idar pinni thuyar annaivvilarē.

திருச்சிற்றம்பலம்

பொன்னால் ஆகிய நீண்ட நல்ல மணிகள் பொருந்திய மாளிகைகள் சூழ்ந்தது—திருவிழாக்கள் பொருந்தியது—காவிரி வெள்ளம் பொருந்தியது—புகலி என்ற பெயர் உடையது—தனக்கு ஒப்பு வேறு எதுவும் இல்லாத பதி—திருஞானசம்பந்தனுடையது—(சீர்காழி). பெரிய செந்தமிழ்க் கடலாக விளங்குபவர் (சம்பந்தர்). அவர் தருமபுரம் என்னும் பதியைப் (பாடியுள்ளார்).

பின்னப்பட்ட நீண்ட சடையில் பிறைச்சந்திரனையும் பாம்பும் உடையவர் (சிவபெருமான்) அவருடைய கழல் பொருந்திய

இரண்டு திருவடிகளை வணங்குபவர், இனிய பெரிய நல்ல சிவலோகத்தை அடைவர். அங்கு (சிவ) போகம் அடைவார்கள்; தொல்லைகள், நோய்கள் துன்பங்கள் அடைய மாட்டார்கள்.

பொன்—golden
மணி—gem
விழவம்—விழா—festival
பொருஉ—dashing
திருஉ—surrounded by
புகல்வீ—புகலி—சீர்காழி—Seerkazhi
நெடு—big; high
மாளிகை—mansion
மலி—abound in
புனல்—water
உலகில்—in the world
நேர்—equal
தன்னொடு—with it
பிற—other
தன்னொடு நேர்பிற இல்—having no other equal to it,
பதி—place
சம்பந்தனஃது—belonging to Sambandhan
செந்தமிழ்—Literary and classical Tamizh.
தடங்கல்—big sea
சடை—matted locks
அரவு—snake
துணை—twain
நெடுவார்—very big
பிறை—crescent moon
கழல்கள்—anklets—feet
பேணுதல்—உரியார்—those who worship
இந் நெடு நன்உலகு—delightful-big-good-world; Siva Lōka
எய்துவர்—will arrive at.
இடர்—difficulties
துயர்—distress
பிணி—disceases
அணைவ்விலர்—அணைவுஇலர்—will not meet with

It is surrounded by golden mansions decked with jewels—festival abound therein—Kaviri floods the place—it is also known by the name Pugali—it has no other place equal to it—t belongs to Gnāna Sambandan. He is sea of senthamizh. He has sung on Dharumapuram.

The Lord has the crescent and the snake on His matted locks. Those who worship the twain ankleted foot of the Lord will go to the delightful-big-good Siva Lōka (சிவலோகம்) and enjoy Siva Bhōga and they will not meet with difficulties, disceases and distress.

திருவீழிமிழலை

திருச்சிற்றம்பலம்

வாசி தீரவே காசு நல்குவீர்
Vaasi theeravē kaasu nalguveer
மாசில் மிழலையீர் ஏசல் இல்லையே
Maasil mizhalaiyeer ēsal illaiyē

வட்டம் நீங்குமாறு காசு கொடுப்பீராக. குற்றம் இல்லாத திருவீழிமிழலை என்ற ஊரில் இருக்கும் கடவுளே! ஏசுதல் இல்லை.

வாசி—வட்டம்—discount
தீர—(without)
காசு—money; coin
நல்குவீர்—please give
மாசில்—flawless
மிழலையீர்—Oh Lord of Mizhalai
மிழலை—the name of a place
ஏசல்—rebuke; censure

Please grant me money that could be changed without discount. Oh Lord of Mizhalai. You will not be rebuked.

இறைவர் ஆயினீர் மறைகொள் மிழலையீர்
Irraivar aayineer marraikoll mizhalaiyeer
கறைகொள் காசினை முறைமை நல்குமே
Karraikoll kasinai murraimai nalgumē

தலைவர் ஆகி இருப்பவரே! வேதம் வல்ல திருவீழிமிழலையில் இருப்பவரே! காசுக்கு உள்ள குறையை நீக்கிநல்லது கொடுப்பீராக.

இறைவர்—Lord; Master
மறை—வேதம்—Vedas
கறை—defect
முறைமை—(in order)—good

Oh Lord who is the master! Oh Lord of Mizhalai, well versed in Vedas. Remove the defects in the coin and give me a good one.

நீறு பூசினீர் ஏறது ஏறினீர்
Neeru pūsineer ērradhu ērrineer
கூறும் மிழலையீர் பேறும் அருளுமே
Kūrrum mizhalaiyeer pērrum arullumē

திருநீறு பூசியுள்ளவரே! இடபத்தின்மேல் ஏறியவரே! திருவீழிமிழலையில் புகழப்படுபவரே! எனக்கு அருள் செய்க.

நீறு—விபூதி—sacred ash
பூசு—smear
ஏறு—bull; to ride
பேறு—grace
அருள்—please bestow

Oh Lord smeared with the sacred Ashes! Oh Lord riding a bull! Oh Lord extolled at Thiru Veezhi Mizhalai (திருவீழிமிழலை) please bestow grace.

மங்கை பங்கினீர் துங்க மிழலையீர்
Mangai pangineer thungamizhalaiyeer
கங்கை முடியினீர் சங்கை தவிர்மினே
Gangai mudiyineer sangai thavirminē

உமையை ஒரு பங்கில் உடையவரே! சிறந்த திருவீழிமிழலையில் இருப்பவரே! கங்கையை திருமுடியில் சூடியவரே! சந்தேகத்தை நீக்குவீராக.

மங்கை—Lady—Uma
பங்கு—part
துங்கம்--சிறப்பு—famous
கங்கை—Ganges
முடி—crown of the head
சங்கை—சந்தேகம்—doubt
தவிர்மின்—நீக்குக—please remove

காழி மாநகர் வாழி சம்பந்தன்
Kaazhi maanagar vaazhi Sambandhan
வீழி மிழலைமேல் தாழு மொழிகளே
Veezhi mizhalaimēl thaazhu mozhigalle.

காழி என்னும் பெரிய நகரத்தில் வாழும் ஞானசம்பந்தர் திருவீழிமிழலையின் பேரில் அடக்கமாக இப் பாடல்களைப் பாடி உள்ளார்.

காழி—seerkazhi
மாநகர்—big town
தாழும்—with respect
வாழி—long live
மொழிகள்—words; verses.

These are the respectful verses sung by Sambandar of the town Seerkazhi on Thiru Veezhi Mizhalai.

சதுரம் மறைதான் துதி செய்து வணங்கும்
Sadhuram marraithaan thudhi seydhu vannangum
மதுரம் பொழில் சூழ் மறைக்காட்டு உறை மைந்தா
Madhuram pozhil sūzh marraikkattu urrai maindhaa
இது நன்கு இறை வைத்து அருள்செய்க எனக்குஉன்
Idhu nangu irrai vaiththu arull seyga enakku un
கதவம் திருக்காப்புக் கொள்ளும் கருத்தாலே.
Kadhavam thirukkaappuk kollllum karuththaalē

நான்கு வேதங்களும் துதித்து வணங்குவதும்—இனிய பொழில்கள் சூழ்ந்ததும் ஆன திருமறைக் காட்டில் இருக்கும் இறைவனே! இதை நன்ருக சிறிது (கருத்தில்) வைத்து எனக்கு அருள் செய்வாயாக! உன் (கோயில்) கதவு (தாமாகவே) மூடிக் கொள்ளுமாறு (செய்க).

சதுரம்—நான்கு—four. மறை—வேதம்—Vedas
துதிசெய்து—worship வணங்கும்—bow down
மதுரம்—sweet; fragrant பொழில்—groves
மறைக்காடு—வேதாரண்யம்—Vedāranyam—the name of a place
மறைக்காட்டு—at Maarraikkadu
உறை—dwell மைந்தா—Oh Lord
(மைந்தன் also means strong man; hence the Lord)
நன்கு—well; suitably இறை—small quantity
அருள்செய்க—bestow grace திருக்காப்புக் கொள்ளும்—to be shut
கருத்து—idea; intention

The four Vedas worship and adore; Oh Lord dwelling at Thiru Marraikkādu surrounded by fragrant groves! Please direct your attention a little towards this and bestow grace with the intention of shutting the doors.

காழிந் நகரான் கலைஞானசம்பந்தன்
Kaazhin nagaraan Kalaignaana Sambandan
வாழ் இம் மறைக்காடனை வாய்ந்து அறிவித்த
Vaazh im marraikkaadanai vaayndhu arriviththa
ஏழ் இன் இசை மாலை ஈர் ஐந்து இவை வல்லார்
Ezh in isai maalai eer aindhu ivai vallaar
வாழி உலகோர் தொழ வான் அடைவாரே.
Vaazhi ulagōr thozha vaan adaivaarē.

திருச்சிற்றம்பலம்

சீர்காழி என்னும் நகரத்துக்கு உரியவன் கலைகளில் வல்ல ஞானசம்பந்தன். இந்தத் திருமறைக்காட்டில் வாழும் இறைவனை விரும்பிப் பாடியுள்ளார். இந்த இனிய ஏழிசை பொருந்திய பாமாலை பத்தும் வல்லவர்கள் உலகில் வாழும் மக்கள் தொழ வானத்தை அடைவர்.

காழி—Seerkazhi
நகர்—town
கலை—arts
அறிவித்த—announced; sung
வாய்ந்து—விரும்பி—with liking
ஏழிசை—the seven kinds of music
மாலை—garland
ஈரைந்து—$2 \times 5 = 10$
வல்லார்—well versed
உலகோர்—inhabitants of the earth
தொழ—to worship
வான்—skies; heaven
அடைவர்—will reach

Gnana Sambandar is the resident of Seerkazhi; He is proficient in all arts; He has sung on the Lord of Thiru Marraikkadu. Those well versed in these ten verses with seven kinds of music will reach heaven worshipped by the inhabitants of the earth,

திருஅண்ணாமலை

திருச்சிற்றம்பலம்

பூவார் மலர்கொண்டு அடியார் தொழுவார் புகழ்வார் வானோர்கள்
Pūvaar malarkonndu adiyaar thozhuvaar pugazhvaar vaanōrgall
மூவர் புரங்கள் எரித்த அன்று மூவர்க்கு அருள் செய்தார்
Mūvar purangall eriththa andru mūvarkku arull seydaar
தூமா மழைநின்று அதிர வெருவித் தொருவின் நிரை ஓடும்
Thūmaa mazhai nindru adhira veruvith thorruvin nirrai ōdum
ஆமாம் பிணைவந்து அணையும் சாரல் அண்ணாமலையாரே.
Aamaam pinnai vandhu annaiyum saaral annnaamalaiyaarē.

கொத்தாக உள்ள மலர்களைக் கொண்டு அடியார்கள் தொழுவார்கள்; தேவர்கள் புகழ்வார்கள். பகைவர்களுடைய மூன்று புரங்களை எரித்த காலத்தில் அந்த மூவருக்கும் அருள் செய்தார். தூய பெரிய மேகங்கள் இடியுடன் (மழைபெய்ய) பயந்து கூட்டத்தோடு அழகிய பெண்மான்கள் சேரும் சாரலை உடைய திருவண்ணாமலையில் உள்ள பெருமான்

பூவார் மலர்—bunch of flowers
அடியார்—devotees
தொழுவார்—worship
புகழ்வார்—adore
வானோர்கள்—celestials
மூவார்—inimical
புரங்கள்—towns
எரித்த—burnt
அன்று—that day
மூவர்க்கு—to the three (Tharakaksha, Kamalaksha of Vithyunmali)
அருள்செய்தார்—bestowed grace
தூ—pure
மாமழை—big Clouds
அதிர—to make noise
தொறுவின் நிரை—(in large numbers)
ஓடும்—run
ஆம்ஆம்—beautiful
பிணை—பெண்மான்—hind
சாரல்—(mountain) slope.
அண்ணாமலையார்—the Lord of Thiru Annamalai

The devotees worship the Lord with bunch of flowers. The celestials adore Him. On burning the three fortresses of the foes, the Lord bestowed grace on those three. The pure clouds shower rain with thunder and the hinds fearing run towards the slope of Thiru Annamalai

அல் ஆடு அரவம் இயங்கும் சாரல் அண்ணாமலையாரை
Al aadu aravam iyangum saaral Annnaamalaiyaarai
நல்லார் பரவப் படுவான் காழி ஞானசம்பந்தன்
Nallaar paravap paduvaan kaazhi Gnaana Sambandan
சொல்லால் மலிந்த பாடல் ஆன பத்தும் இவை கற்று
Sollaal malindha paadal aana paththum ivai katru
வல்லார் எல்லாம் வானோர் வணங்க மன்னி வாழ்வாரே.
Vallaar ellaam vaanor vannanga manni vaazhvaarē.

திருச்சிற்றம்பலம்

இரவில் படம் எடுத்து ஆடும் பாம்புகள் செல்லும் சாரலை உடைய திரு அண்ணாமலையில் உள்ள கடவுளை, நல்லவர்கள் போற்றும் சீர்காழியில் உள்ள ஞானசம்பந்தர் புகழ் பொருந்திய பாடல்கள் பாடியுள்ளார். இப்பாடல்கள் பத்தும் கற்று வல்லவர் எல்லோரும் தேவர்கள் வணங்க நிலைபெற்று வாழ்வார்கள்.

அல்—night அரவம்—பாம்பு; snake
இயங்கும்—செல்கிற—going. சாரல்—slope
அண்ணுமலையார்—the Lord of Thiru Annamalai
நல்லார்—the virtuous.
பரவப்படுவான்—போற்றப்படுபவன்—one adored by
சொல்—famous மலிந்த—abound in
கற்று வல்லார்—well versed.
வானோர்—celestials வணங்க—bowdown
மன்னிவாழ்வார்—live permanently.

At the slopes of Annamalai the Snakes dance in the nights. Gnanasambandar, adored by the virtuous has sung on the Lord of Thiru Annamalai. Those who are well versed in those ten verses will be seated in heaven worshipped by the celestials.

## திருநாவுக்கரசர்

திருச்சிற்றம்பலம்

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
Naamaarkkum kudiyallōm namanai anjōm
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
naragaththil idarppadōm nadalai illōm
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
Emaappōm pinniyarriyōm pannivōm allōm
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
inbamē ennaallum thunbam illai
தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மைஆன
Thaam aarkkum kudiyallaath thanmaiaana
சங்கரன் நல்சங்க வெண்குழை ஓர்காதில்
sankaran nalsanga vennkuzhai ōrkaadhil
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
Kōmaarkē naamendrum meellaa aallayk
கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.
koymmalarch chēvadi innaiyē kurruginōmē.

நாம் யாருக்கும் குடிமக்கள் அல்லோம்; இயமனைக்கண்டு பயப்படமாட்டோம்; நரகத்தில் (விழுந்து) துன்பம் அடைய மாட்டோம்; பொய் (எம்இடம்) இல்லை; களிப்புற்று இருப்போம்; நோய்கள் அறிய மாட்டோம்; பணிய மாட்டோம்; இன்பமே, எந்த நாளிலும் துன்பம் இல்லை.

தாம் எவருக்கும் குடிமகன் அல்லாத தன்மை உடையவன், சங்கரன்; நல்ல சங்கினால் ஆகிய வெண்மை நிறம் பொருந்திய குழையை ஒரு காதில் அணிந்துள்ள தலைவன்; அவனுக்கே நாம் எப்பொழுதும் மீண்டு வராத அடிமை ஆகினோம்; அவனுடைய மலர்போன்ற செம்மையான இரண்டு திருவடிகளையே அடைந்தோம்.

ஆர்க்கும்—யாருக்கும்—to any one (to all)
குடிஅல்லோம்—not a subject to
நமன்—Yama, the God of Death

அஞ்சோம்—fear not.
நரகம்—hell
இடர்—misery
படோம்—will not suffer
நடலை—falsehood
ஏமாப்போம்—indulge not in pleasure.
பிணி—disease
அறியோம்—know not
பணிவோம் அல்லோம்—subservient we are not
இன்பம்—joy
எந்நாளும்—always
துன்பம்—grief
தரம்—state
தன்மை—state
சங்கரன்—Sankaran; Lord Siva; dispenser of happiness
சங்கம்—conch
குழை—ear rings
கோமான்—king—Lord
மீளா—without recarding
ஆள்—servile one
கொய்—to gather
சேவடி—russet feet
மலர்—flower
குறுகினோம்—we reached
இணை—Twain

We are not subject to (or under the control of) any one. We fear not Yama. We suffer not in hell. We do not utter falsehood. We indulge not in pleasure. We suffer not diseases. Subservient we are not. We are always joyful; we do not have grief.

He is Sankara, the dispenser of happiness; He is never under the control of anybody—this is His state. He wears white conch ear rings; He is our Lord; We are always servile to Him. His twain russet flowerlike feet, we have reached.

நாவார நம்பனையே பாடப் பெற்றோம்
Naavaara nambanniyē paadap petrōm
நாணற்றார் நள்ளாமே விள்ளப் பெற்றோம்
naannatrar nallllaamē villllap petrōm
ஆவா என்று எமை ஆள்வான் அமரர் நாதன்
Aavaa endru emai aallvaan amarar naadhan
அயனொடு மாற்கு அறிவரிய அனலாய் நீண்ட
ayanodu maarrku arrivariya analaay neennda
தேவாதி தேவன் சிவன் என் சிந்தை
Dhēvaadhi dhēvan sivan en sindhai

சேர்ந்திருந்தான் தென்திசைக்கோன் தானே வந்து
sērndhirundhaan thendhisaikkōn thaanē vandhu
கோவாடிக் குற்றேவல் செய்க என்றாலும்
Kōvaadik kutrēval seyga endraalum
குணமாகக் கொள்ளோம் எண்குணத்(து) உளோமே.
gunnamaagak kollllōm enngunnaththu ullōmē.

திருச்சிற்றம்பலம்

நாக்கு விரும்பும் அளவு இறைவனைப் பாடினோம்; நாணம் இல்லாத சமணர் விரும்பாமல் நீங்கினார்கள். ஆஆ என்று எம்மை ஆள்பவன்— தேவர்களுக்குத் தலைவன்— பிரமனும் திருமாலும் அறிய முடியாதபடி நெருப்பாய் நின்றவன்—தேவர்களுக்கெல்லாம் முற்பட்ட தேவன்—சிவன்—அவன் என் மனத்தில் சேர்ந்து இருக்கிறான். இயமன்தானே வந்து, எம் தலைமையைக் கூறி, ''உமக்கு ஏவல் செய்வேன்'' என்று கூறினாலும், அதனை நெறியாகக் கொள்ளமாட்டோம். நாம் சிவபெருமானது எண் குணங்களையும் உடையோம்.

நா—tongue
நாஆற—to the satisfaction of the tongue (to the heart's content)
நம்பன்—Lord
நாண் அற்றார்—shameless; immodest
நள்ளாமே—விரும்பாமல்—without liking
விள்ள—to leave
ஆவா—ஆ ஆ—Ha Ha (expression of wonder)
ஆள்வான்—one who protects
அமரர் நாதன்—Lord of the celestials
அயன்—பிரமன்—Brahma
மால்—திருமால்—Vishnu
அறியஅரிய—unperceived
அனல்—fire
தேவாதிதேவன்—Primal one
சிந்தை—mind
தென்திசைக்கோன்—the regent of south
தென்திசை—south direction
கோ ஆடி—expressing superiority
குற்றேவல் செய்து—I will do what you bid
குணம்—prospriety
எண்குணம்—eight attributes.

To my heart's content I have sung (in praise of) the Lord... I am fortunate to have come out from the (congregation) of

the Jains. Ha! Ha! so saying the Lord has taken me under His protection; He is the Lord of the celestials; He is unperceived by Brahma or Vishnu; He stood in the form of a mass of fire; He is the primal one; He is Siva; He is seated in my mind. Even if Yama, the God of Death, should come to me, expressing my superiority and say, "I will do what you bid", I will not take it as proper. We have come to possess the eight attributes of Siva.

திருப்பெண்ணாகடம்

திருச்சிற்றம்பலம்

பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம்போற்றிசெய்யும்
Ponnaar thiruvadikku ondru unndu vinnnappam pōtri seyyum
என்னாவி காப்பதற்கு இச்சை உண்டேல் இருங் கூற்று அகல
Ennaavi kaappadharrku ichchai unndēl irungkūtru agala
மின்னாரு மூவிலைச் சூலம்என் மேற்பொறி மேவு கொண்டல்
Minnaaru mûvilaich chūlamen mērrporri mēvu konndal
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.
Thunnaar kadandhaiyull thūngaanai maadach chudarkozhundhē.

பொன் போன்ற உன் திருவடிக்கு விண்ணப்பம் செய்து கொள்வது ஒன்று இருக்கிறது. வணக்கம் செலுத்துகிற என் உயிரைக் காப்பதற்கு உனக்கு விருப்பம் இருப்பின், பெரிய இயமன் நீங்கும்படி, ஒளிபொருந்திய மூன்று இலைகளையுடைய சூலத்தை என்மேல் பொறி! மேகம் தவழ்கிறதும், (பகைவர்) புகுவதற்கு அரியதும் ஆன, பெண்ணாகடத்தில் உள்ள, தூங்கானை மாடம் என்னும் கோயிலில் இருக்கும் சுடர்க்கொழுந்து என்ற கடவுளே.

பொன் ஆர் திருவடி—golden feet விண்ணப்பம்—request
போற்றி செய்யும்—worshipping
ஆவி—life காப்பதற்கு—to protect
இச்சை—liking இரும்கூற்று—big Yama
மின் ஆரும்—dazzling மூவிலைச்சூலம்—trident
பொறி—brand; impress கொண்டல்—மேகம்—clouds
துன் ஆர்—hard to enter
கடந்தை—பெண்ணாகடம்—Pennnnakadam—the name of the place

தூங்கானை மாடம்—கோயிலின் பெயர்—the name of the temple
சுடர்க்கொழுந்து—the name of the God in the temple

I have a humble request to make to your golden Feet. If you should desire to protect the life of myself a devotee and turn abide Yama, please impress upon me the dazzling trident. Oh Lord called Sudarkkozhundu enshrined in Thiruth thūnganai-madam at Pennnagadam (The temple is overspreaded with clouds and not easy for the elephants to enter).

கடவுந் திகிரி கடவாது ஒழியக் கயிலை யுற்றான்
Kadavun dhikiri kadavaadhu ozhiyak kayilai yutraan
படவுந் திருவிரல் ஒன்றுவைத் தாய்பனி மால் வரைபோல்
Padavun thiruviral ondru vaiththaaypani maalvaraipol
இடவம் பொறித்து என்னை ஏன்றுகொள்வாய் இருஞ்சோலை திங்கள்
Idavam porriththu ennai ēndru kollvaay irunjsolai thingall
தடவுங் கடந்தையுள் தூங்கானை மாடத்து எம் தத்துவனே.
Thedavun kadandhaiyull thūngaahai maadaththu em thaththuvane

திருச்சிற்றம்பலம்

செலுத்தும் தேர் செல்லாது நின்றது; (இராவணன்) கயிலையைப் பெயர்த்தான்; பெயர்க்கவும் நீ உன் திருவிரல் ஒன்றை ஊன்றிய பெருமானே! பனி பொருந்திய பெரிய மலை போன்ற இடபக்குறியைப் பொறித்து என்னை ஏற்றுக்கொள்வாய். சந்திரன் செழித்த சோலையைத் தவழ்ந்து செல்லும், பெண்ணு கடத்தில் உள்ள, தூங்கானை மாடம் என்னும் கோயிலில் உள்ள மெய்ப்பொருளே!

கடவும்—that was driven
திகிரி—சக்கரம்—தேர்—wheel—chariot
கடவாது ஒழிய—that could not be driven
கயிலை—Mt. Kailas—திருக்கயிலாயமலை
படவும்—(as the Lord) pressed
திருவிரல்—holy finger (toe)
வைத்தாய்—placed (pres sed)
பனி—ice
மால்—high; big
வரை—mountain
போல்—like
பனிமால்வரை—இமயமலை—Himalayas
இடவம்—இடபம்—Bull
பொறித்து—branding
ஏன்றுகொள்வாய்—take me; (bless me)

இருஞ்சோலை—thick grove திங்கள் —சந்திரன்—Moon
தடவும்—creeping
தத்துவன்—மெய்ப்பொருள்—God as the ultimate reality.

The chariot which Ravanna drove could not proceed. Hence he tried to lift the mountain. Oh Lord who pressed the mountain with your toe!

Please impress upon me the Bull (insignia) which is white like the Himalayas. Oh Lord enshrined in Thiruththūngānai madam at Pennnnagadam! (The place is surrounded by lofty groves where the moon creeps).

தில்லைச்சிற்றம்பலம்

திருச்சிற்றம்பலம்

அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
Annam baalikkum thilaich Chitrambalam
பொன்னம் பாலிக்கும் மேலும் இப் பூமிசை
Ponnam baalikkum mēlum ip pūmisai
என் அன்பு ஆலிக்குமாறு கண்டு இன்புற
En anbu aalikkumaarru kanndu inburra
இன்னம் பாலிக்குமோ இப் பிறவியே.
Innam baalikkumō ip pirraviyē.

உணவைக் கொடுக்கும் சிதம்பரத்தில் உள்ள திருச்சிற்றம்பலத்தில் உள்ள இறைவன்; மேலும் பொன்னையும் அளிக்கும் இந்த உலகத்தில். என் அன்பு பொருந்தி உள்ள நிலைமையைப் பார்த்து, நான் இன்பம் அடைய, இன்னமும் இந்த (மானிடப் பிறவி) வருமோ?

அன்னம்—சோறு- உணவு—food
பாலிக்கும்—will give தில்லை—சிதம்பரம்—Chidambaram
சிற்றம்பலம்—Hall of wisdom பொன்னம்—பொன்—gold
மேலும்—further பூமிசை—on the earth
அன்பு—love; affection இன்னம்—further
இன்புற—to enjoy பிறவி—birth.

The Lord of the Hall of wisdom at Chidambaram will give food; further He will give gold. On seeing at my love to Him, in order that I may feel joy, will He bless me with this human birth further on?

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
Allal enseyum aruvinai enseyum
தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்
Thollai valvinaith thondhandhaan enseyum
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்கு
Thillai maanagarch chitram balavanaarkku
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே.
Ellai illadhor adimai pūnndēnukkē.

திருச்சிற்றம்பலம்

ஆகாமியம் ஆகிய அல்லல் என்னை என்ன செய்யும்? பிரார்த்த வினை என்ன செய்யும்? பழைய வல்வினையாகிய சஞ்சிதம் எனும் துவந்துவம் என்ன செய்யும்? தில்லையாகிய பெரிய நகரில் திருச் சிற்றம்பலத்தில் உள்ள இறைவனுக்கு அளவுஇல்லாத அடிமை பூண்டு இருக்கிற எனக்கு?

அல்லல்—ஆகாமியம்—இப்பிறப்பில் செய்யும் புண்ணிய பாவங்கள் —good and bad deeds of the present birth.

அருவினை—பிராரத்தம்—இப்பிறவியில் பயன் அளிக்கும் பழவினை— —past karma whose affects has begun to operate.

தொல்லை—பழமையான—old

வல்வினை—வலிமைபொருந்தியவினை—strong deed

தொந்தம் — துவந்துவம் —இருவினை — சஞ்சிதம் —Sanchita — அனுதியாய் ஈட்டப்பட்டு உள்ள கருமத்தில் அனுபவித்துத் தீர்ந்தது போக மீதிஇருப்பது—Accumulated karma of former births that still remain to be experienced. மாநகர்—city

சிற்றம்பலவனார்—The Lord at the Hall of Wisdom

எல்லை இல்லதோர் அடிமை—unlimited bondage

What can the Akamya do? What can the Prarabhdha do? What can the old strong Sanchitha also do? I have entertained unlimited bondage to the Lord at the Hall of Wisdom?

திருவாரூர்

திருச்சிற்றம்பலம்

கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி
Katravargall unnnum kaniye potri
கழல் அடைந்தார் செல்லும் கதியே போற்றி
Kazhal adaindhaar sellum gadhiye potri

அற்றவர்கட்கு ஆரமுதம் ஆனாய் போற்றி
Atravargatku aaramudham aanaay pōtri
அல்லல் அறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி
allal arruththu adiyēnai aanndaay pōtri
மற்றொருவர் ஒப்பில்லா மைந்தா போற்றி
Matroruvar oppillaa maindhaa pōtri
வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி
Vaanavargall pōtrum marundhē pōtri
செற்றவர்தம் புரம் எரித்த சிவனே போற்றி
Setravardham puram eriththa sivanē pōtri
திருமூலட்டானனே போற்றி போற்றி.
thirumūlat taananē pōtri pōtri.

கற்றவர்கள் உண்ணும் பழமே போற்றி! உன் திருவடியை அடைந்தவர் அடையும் மோட்சமாக இருப்பவனே போற்றி! பற்று அற்றவர்களுக்கு அமுதம் ஆனவனே போற்றி! இரு வினையை அறுத்து என்னை ஆண்டுகொண்டவனே போற்றி! வேறு ஒருவரும் ஒப்பு இல்லாதவனே போற்றி! தேவர்கள் போற்றும் அமுதம் ஆகியவனே போற்றி! பகைவர்களுடைய முப்புரங்களையும் எரித்த சிவனே போற்றி! திருவாரூரில் திருமூலட்டானத்து எழுந் தருளியுள்ள இறைவனே போற்றி! போற்றி!

கற்றவர்கள்—the learned; wise
உண்ணும்—to eat; to taste
கனி—பழம்—fruit
போற்றி—Hail
கழல்—வீரக்கழல்—திருவடி—anklet—feet
கதி—முத்தி—beautitude
அற்றவர்—those who have renounced the world
ஆரமுதம்—rare ambrosia
அல்லல்—(the fruits) of good and evil deed.
அறுத்து—நீக்கி—to sever
மற்றொருவர்—anyone else
ஒப்பு இல்லா—without an equal
மைந்தா—Oh strong one! (Omnipotent)
வானவர்கள்—தேவர்கள்—celestials
போற்றும்—adore
மருந்து—அமிர்தம்—ambrosia

செற்றவர்—inimical

புரம்—fortress எரித்த—burnt

திருமூலட்டானன்—திருவாரூர்க்கோயில் கருவறையில் இருக்கும் இறைவன்—the Lord in the Sanctum Sanctorum of the Temple at Thiru Arur.

Oh fruit tasted by the wise, Hail!

Oh Beatitude attained by those who worship Your feet, Hail!

Oh Ambrosia obtainable by those who have renounced the World, Hail!

Oh Lord who severed (the fruits of) good and evil deeds and blessed me, Hail!

Oh strong One without an equal, Hail!

Oh Ambrosia adored by the celestial Hail!

Oh Siva who burnt the fortresses of the inimical (giants) Hail!

Oh Lord of the Sanctum Sanctorum at Thiru Arur, Hail! Hail!

பிரமன் தன் சிரம் அரிந்த பெரியோய் போற்றி
Biramanthan siram arindha periyoy potri
பெண்ணுருவோடு ஆணுருவாய் நின்றாய் போற்றி
pennnnnuru vōdu aannuruvaay nindraay pōtri
கரம் நான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி
Karam naangum mukkannnnum udaiyaay potri
காதலிப்பார்க்கு ஆற்ற எளியாய் போற்றி
kaadhalip paarkku aatra elliyaay pōtri
அருமந்த தேவர்க்கு அரசே போற்றி
Aru mandha dhēvarkku arasē pōtri
அன்று அரக்கன் ஐந்நான்கு தோளும் தாளும்
aandru arakkan ainnaangu thōllum thaallum
சிரம் நெரித்த சேவடியாய் போற்றி போற்றி
Siram nériththa sēvadiyaay potri potri
திருமூலட் டானனே போற்றி போற்றி
thirumūlat taananē Pōtri potri.

திருச்சிற்றம்பலம்

பிரமனது தலையை அறுத்த பெரியோனே போற்றி!
பெண்ணுருவத்தோடு ஆண் உருவத்தையும் கொண்டு இருப்பவனே, போற்றி!
நான்கு திருக்கைகளையும், மூன்று கண்களையும் உடையவனே போற்றி!
உன்னை விரும்புபவர்களுக்கு மிகவும் எளிமையாக இருப்பவனே, போற்றி!
அரிய மருந்து உடைய தேவர்கட்கு அரசே போற்றி!

முன்நாளில் இராவணனின் இருபது தோள்களையும், கால்களையும், பத்துத் தலைகளையும் நெரித்த திருவடி உடையவனே, போற்றி! போற்றி! திருவாரூரில் திருமூலட்டானத்தில் எழுந்தருளியுள்ள இறைவனே; போற்றி! போற்றி!

பிரமன்—Brahma
சிரம்—தலை—head
அறுத்த—to cut; sever
பெரியோய்—Oh great one!
பெண்ணுரு—female form
ஆணுரு—male form
கரம்—hand
நான்கு—four
முக்கண்—three eyes
காதலிப்பார்க்கு—to those who worship with affection
ஆற்ற—மிகவும்—very
எளியாய்—easily approachable
அருமந்த—அருமையான அமுதம் உடைய;—having rare ambrosia
தேவர்—celestials
அரசு—Lord
அன்று—that day—Long ago
அரக்கன்—இராவணன்—giant—Ravanna
ஐந்நான்கு—$5 \times 4 = 20$
தோள்—shoulders
சிரம்—head
தாள்—foot
சேவடி—russet feet
நெரித்த—pressed

Oh great Lord who severed the head by Brahma, Hail!
Oh Lord assuming both feminine and masculine forms, Hail!
Oh Lord having four arms and three eyes, Hail!

Oh Lord easily approachable by those who worship You with affection, Hail!

Oh Lord of the celestials who have ambrosia, Hail!

Oh Lord having feet which pressed the twenty shoulders, the feet and the ten heads of Ravanna, Hail! Hail!

Oh Lord of the Sanctum Sanctorum at Thiru Arur, Hail! Hail!

# சுந்தரர்

திருவதிகை

திருச்சிற்றம்பலம்

தம்மானை அறியாத சாதியார் உளரே
Thammaanai arriyaadha saadhiyaar ullarē
சடைமேல்கொள்பிறையானைவிடைமேல் கொள்விகிர்தன்
sadai mēlkoll pirraiyaanai vidaimēl koll vikirdhan
கைம்மாவின் உரியானைக் கரிகாட்டில் ஆடல்
Kaimmaavin uriyaanaik karikaattil aadal
உடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்து
udaiyaanai vidaiyaanaik karraikonnda kanndaththu
எம்மான்தன்அடிக்கொண்டுஎன்முடிமேல்வைத்திடும்என்னும்
Emmaanthan adikkonnduen mudimēl vaiththidum ennum
ஆசையால் வாழ்கின்ற அறிவிலா நாயேன்
aasaiyaal vaazhkindra arrivilaa naayēn
எம்மானை ஏறிகெடில வடவீரட்டானத்து
Emmaanai ērrikedila vadaveerattaanaththu
உறைவானை இறைபோதும் இகழ்வன்போல் யானே.
urraivaanai irraipōdhum igazhvanpōl yaanē.

தம் தலைவனை அறியாத மக்கள் இருக்கமுடியுமா? சடையின் மேல் பிறையை உடையவன்—இடபத்தின்மேல் சவாரி செய்பவன் யானைத்தோலைப் போர்த்திக் கொண்டவன்—சுடுகாட்டில் ஆடு பவன்— இடபக்கொடி உடையவன் —விஷக்கறை உள்ள கண்டத்தை உடைய தலைவன்—தன் திருவடியை என் தலைமேல் வைக்கும் என்னும் ஆசையால் வாழ்கின்றேன்—நான் அறிவில் லாத நாய் போன்றவன். எம்பெருமான்—அலைகள் மோதும் கெடில நதியின் வடகரையில் (திருவதிகை) வீரட்டானத்தில் இருப்பவன் ஆகிய இறைவனைச் சிறிது பொழுது இகழ்ந்ததுபோல் யான் இருந்தேன் (அந்தோ).

தம்மான்—தம் தலைவன்—their master
சாதியார்—மக்கள்—people
சடை—matted locks

பிறை—cresent moon. விடை—எருது—bull
விகிர்தம்—god as different from the world
கைம்மா—யானை—elephant உரி—stain
கரிகாடு—சுடுகாடு—cremation ground (at the time of final deluge)
ஆடல்—dance
விடையான்—having the bull an a emblem in the flag
கறை—mark (of poison) கண்டம்—throat
எம்மான்—எம்தலைவன்—my Lord
அடி—feet முடி—head
ஆசை—desire . அறிவுஇலா—foolish
நாயேன்—dog like one
கெடிலம்—Gedilam—a river flowing near Thiru adhigai
விரட்டானம்—the name of the temple at Thiru adhigai
உறைவான்—one who resides
இறைபோதும்—even for a moment
இகழ்வன்—to dishonour; to despise

Can there be any one without knowing their master?

He has the crescent on His matted locks—He rides a bull—He has covered Himself with the skin of an elephant—He dances in the cremation ground (at the time of final deluge)—He has the bull banner—He is having the mark of poison on His throat— "He will place His feet on my head"—so desiring, a foolish dog-like one, am living—He is my Lord—He is enshrined at (Thiru Adhigai) Veerattnam, on the northern bank of the river Gedilam—I remained as if I despised Him for a moment. Alas!

என்பினையே கலனாக அணிந்தானை எங்கள்
Enbinaiye kalanaaga annindhaanai engall
எருதுஏறும் பெருமானை இசைஞானி சிறுவன்
erudhu errum perumaanai isaignaani siruvan
வன்பனைய வளர்பொழில்சூழ் வயல்நாவ லூர்க்கோன்
Vanbanaiya vallarpozhil sūzh vayalnaava lūrkkōn
வன்தொண்டன் ஆரூரன் மதியாது சொன்ன
vanthonndan aarūran madhiyaadhu sonna

அன்பனை யாவர்க்கும் அறிவரிய அத்தர்
Anbanai yaavarkkum arrivariya aththar
 பெருமானை அதிகைமா நகருள்வாழ் பவனை
 perumaanai adhikaimaa nagarull vaazhbhavanai
என்பொன்னை எறிகெடில வடவீரட்டானத்து
Enponnai errikedila vadaveerattaanaththu
 உறைவானை இறைபோதும் இகழ்வான்போல் யானே.
 urraivaanai irraipodhum ikazhvanpol yaanē.

திருச்சிற்றம்பலம்

எலும்பையே அணிகலமாக அணிந்தவனை, எருதை ஊர்ந்து வரும் எங்கள் தலைவனை,

இசை ஞானியாருடைய மகன்—வலிய பனை மரங்களையுடையதும், பொழில்கள் சூழ்ந்ததும், வயல்களை உடையதும் ஆன திருநாவலூர் என்ற ஊர்க்குத் தலைவன்—வன் தொண்டன்—ஆரூரன் (ஆகிய சுந்தரன்) மதியாது சொல்லப்பட்ட அன்பு உருவினனை

யாராலும் அறிய முடியாத மேலான தலைவனை, திருவதிகை என்னும் பெரிய நகரத்தில் வாழ்பவனை, என் பொன் போன்றவனை அலைகளை எறியும் கெடில நதியின் வடகரையில் வீரட்டானத்தில் உள்ள இறைவனைச் சிறிது பொழுது இகழ்ந்ததுபோல் இருந்தேன். (அந்தோ)

என்பு—எலும்பு--Bone கலன்—ஆபரணம்—jewels
அணிந்தான்—adorned எருது—bull
இசை—ஞானி—சுந்தரரின் தாய்—the name of the mother of Sundarar
சிறுவன்—மகன்—son பனை—Palmyra
பொழில்—தோட்டம்—groves
நாவலூர்க்கோன்—சுந்தரர்—King of Thiru Navalūr—Sundarar; Navalūr is the place of Sundarar. கோன்—அரசன்—King
வன்தொண்டன்—harsh devotee. The Lord came in the guise of an aged brahmin and asked Sundarar to serve Him according to a document executed by his grand father. Sundarar refused and picked up a quarrel with Him. The case was proved. As Sundarar was rough with the Lord, he was given the name Van Thonndan.

மதியாது—with disrespect
அன்பன்—embodiment of love
அத்தர்—wise
மாநகர்—city
பொன்—gold

He adorned Himself with bones as jewels—He rides a bull—He is my Lord.

He is the embodiment of love whom the son of Isai Gnani the king of Thiru Navalūr surrounded by the strong palmyra trees, groves and fields—Vanthonndan—Arūran—had talked with disrespect.

He is unperceivable by any one—He is the Lord of the wise—He resides at the city called Thiru Adhigai—He is as dear as gold—He is enshrined at Veerattanam on the northern bank of the river Gedilam—I remained as if I despised Him for a moment. Alas!

திருக்கழுமலம்

திருச்சிற்றம்பலம்

சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனை வகுத்துத்
Saadhalum pirraththalum thavirththu enai vaguththuth
தன்னருள் தந்தஎன் தலைவனை மலையின்
thannarull thandhaen thalaivanai malaiyin
மாதினை மதித்து அங்கோர் பால்கொண்ட மணியை
Maadhinai madhiththu anggōr paalkonnda manniyai
வருபுனல் சடையிடை வைத்த வெம்மானை
varupunal sadaiyidai vaiththa vemmaanai
யேதிலென் மனத்துக்கோர் இரும்புண்ட நீரை
Yēthilen manaththukkōr irumbunnda neerai
எண்வகை யொருவனை எங்கள் பிரானைக்
ennvagai yoruvanai engall piraanaik
காதில்வெண் குழையனைக் கடல்கொள மிதந்த
Kaadhillvenn kuzhaiyanaik kadalkolla midhandha
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே.
kazhumala vallanagark kanndu konndēnē.

இறத்தலும் பிறப்பதும் நீக்கி, என்னைப் படைத்து அருள் தந்த தலைவனை—மலைமகள் ஆகிய உமையைத் தன் ஒரு பங்கில் கொண்

டவனை—மாணிக்கம் போன்றவனை—வானில் இருந்து வந்த கங்கையைச் சடையில் வைத்தவனை—என் தலைவனை—எனக்கு அயல் ஆகாதவனை—இரும்பு உண்ட நீர்போல என் மனத்து உள்ளே கலந்து நிற்பவனை—எட்டு வடிவமாகி நின்ற ஒருவனை—என் தலைவனை—காதில் வெண்குழை அணிந்தவனை—கடலில் மிதந்த கழுமலம் என்னும் வளம் பொருந்திய நகரில் கண்டு கொண்டேன்.

சாதல்—death பிறத்தல்—birth
தவிர்த்து—forbid; dispel வகுத்து—created
அருள்—grace தலைவன்—Lord
மலையின் மாது—மலைமகள்—உமை—Daughter of Himavan—Uma
ஓர்பால்—in one part (of the body) மணி—jewel
புனல்—வெள்ளம்—கங்கை—flood—Ganges
சடை—matted locks எம்மான்—My Lord
ஏதில்—not an alien மனம்—mind
இரும்பு—(not hot) iron நீர்—water
எண்வகை—எட்டுவடிவு--நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், உயிர்.

Eight forms—Earth, Water, Fire, Wind, Sky, Sun, Moon and Soul.

ஒருவன்—Primal One எங்கள் பிரான்—our master
காது—ear வெண் குழை—white ear rings,
கடல்—sea மிதந்த—floated
கழுமலம்—சீர்காழி—Kazhumalam is one of the names of Seerkazhi
வளநகர்—fertile city

He is the Lord who dispelled death and birth; He caused me to be born and bestowed grace; He holds Uma in one part of His body; He is gem-like; He is my Lord who holds the Ganges in His matted locks; He is not an alien; He is in my mind as the water absorbed by red hot iron; He is in eight forms; He is the Primal one; He is my Lord; He wears the white conch as ear rings; Him I found at the city called Kazhumalam which floated on the sea (at the final deluge).

செழுமலர்க் கொன்றையும் கூவின மலரும்
Sezhumalark kondraiyum kūvina malarum
விரவிய சடைமுடி அடிகளை நினைந்திட்டு
viraviya sadaimudi adikallai ninaindthittu
அழுமலர்க் கண்ணிணை அடியவர்க்கு அல்லால்
Azhumalark kanninnai adiyavarkku allllaal
அறிவு அரிது அவன் திருவடி இணை இரண்டும்
Arrivu Aridhu avan thiruvadi irranndum
கழுமல வளநகர்க் கண்டுகொண்டு ஊரன்
Kazhumala vallnagark kanndu konndu ūran
சடையன்தன் காதலன் பாடிய பத்தும்
Sadaiyanthan kaadhalan paadiya pathum
தொழுமலர் எடுத்த கை அடியவர் தமமைத்
Thozhumalar eduththa kai adiyavar thammaith
துன்பமும் இடும்பையும் சூழகிலாவே
thunbamum idumbaiyum sūzhukilaave.

திருச்சிற்றம்பலம்

செழிப்பான கொன்றை மலரையும், வில்வ இலையையும் பொருந்திய சடையுடையவர் சிவபிரான்; அவரை நினைந்து மலர் போன்ற இரண்டு கண்களில் இருந்து நீர் வடிப்பர் அடியவர்கள். அத்தகைய அடியவர்களுக்கு அல்லாமல் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளும் அறிவதற்கு அரிதாகும். அவற்றைக் கழுமலம் என்னும் வளம் பொருநதிய நகரில் கண்டு தரிசித்தார்—ஊரன் என்ற பெயரையுடையவர்—சடையனுருடைய திருமகன் ஆகிய சுந்தரர். அச்சுந்தரர் பாடிய பாடல்களைக் கொண்டு தொழுபவர்—மலர் கொண்ட கைகளையுடைய அடியவர்களை துன்பங்களும் இடையூறுகளும் சூழமாட்டா.

கொன்றை—a kind of flower
கூவிளம்—வில்வம்—Vilwa—BAEL—the leaf of Vilwa is used for offering
விரவிய—intermixed
சடைமுடி அடிகள்—the Lord having matted locks
அடிகள்—Lord.
நினைந்திட்டு—thinking
மலர்க்கண்—flower like eyes
அழும்—crying

இணை—two அடியவர்— devotees
அல்லால்—but for அறிவுஅரிது—can not be perceived
திருவடி—holy feet ஊரன்—Sundarar
சடையன்—Sadaiyanar—the name of the father of Sundarar
காதலன்—son பாடிய—sung
பத்து—ten (verses) தொழும்—worship
அடியவர்—devotees துன்பம்—distress
இடுபடை—இடையூறு—hindrance
சூழகிலா—will not surround or approach.

The Lord has matted locks where KONRAI flowers and VILWA leaves abound, By thinking of or meditating upon the Lord, the devotees shed tears (of joy). Excepting to those devotees Lord's feet are unperceivable. Uran—the son of Sadaiyanar viz., Sundarar witnessed the Lord at Kazhumalam (Seerkazhi) and sang ten verses. Distress and hindrance will not approach those who worship the Lord by these songs with flowers in their hands.

திருக்கூடலை ஆற்றூர்

திருச்சிற்றம்பலம்

வடிவுடை மழுவுஏந்தி மதகரி யுரி போர்த்துப்
Vadivudai mazhuvu endhi madhagari yuri pōrththup
பொடியணி திருமேனிப் புரிகுழல் உமையோடும்
Podiyanni thiru mēnip purikuzhal umaiyodum
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரில்
Kodiyanni nedu maadak kūdalai yaatrūril
அடிகள் இவ்வழி போந்த அதிசயம் அறியேனே.
Adigall ivvazhi pōndha adhisayam arriyēnē.

கூர்மையான மழுவைக் கையில் கொண்டவன்; மதயானையின் தோலைப் போர்த்துக் கொண்டவன்; திருநீறு பூசிய திருமேனி யுடையவன்; சுரிந்த கூந்தலையுடைய உமையோடு இருப்பவன்—கொடிகள் அழகு செய்யும் பெரிய மாளிகைகளையுடைய கூடலை யாற்றூரில் இருப்பவன்—அச்சிவபெருமான் இந்த வழியில் வந்த அதிசயத்தை நான் அறியாமல் போனேனே!

வடி—கூர்மை—sharp
ஏந்தி—holding
உரி—skin
பொடி—sacred Ash
புரிகுழல்—curly hair
நெடு மாடம்—big mansions
கூடலையாற்றூர்—a place
இவ்வழி—this way
மழு—javelin
மதகரி—rut elephant
போர்த்து—covering
திருமேனி—holy body
கொடி—flag
அடிகள்—Lord
அதிசயம்—wonder
அறியேனே—I am ignorant of

He holds a sharp javelin; He covers Himself with the (peeled) skin of a rut elephant; He smears His body with the holy ashes; With Uma having curly hair, He is enshrined at Kūdalaiyatrur where there are high mansions adorned with flags. He came with me in this way which is a wonder. This I am ignorant of.

கூடலை யாற்றூரில் கொடியிடை அவளோடும்
Kūdalai yaatrūril kodiyidai avallodum
ஆடல் உகந்தானை அதிசயம் இதுவென்று
Aadal ugandhaanai adhisayam idhuvendru
நாடிய இன்தமிழால் நாவல ஊரன் சொல்
Naadiya inthamizhaal naavala vūran sol
பாடல்கள் பத்தும் வல்லார் தம்வினை பற்று அறுமே.
Paadaagall paththum vallaar thamvinai patru arrume.

திருச்சிற்றம்பலம்

திருக்கூடலையாற்றூரில் கொடி போன்ற இடையுடைய உமையோடு இருப்பவர். (என் பொருட்டு) திருவிளையாடலை விரும்பிச் செய்தார். இது அதிசயம் என்று ஆராய்ந்த இனிய தமிழால் திருநாவலூரர் ஆகிய சுந்தரர் இப்பத்துப் பாடல்களைப் பாடி உள்ளார். இவற்றைப் பாடவல்லவர்களின் வினை கெடும்.

கொடி—creeper
இடை—waist
அவள்—she - Uma
ஆடல்—sport
உகந்தான்—விரும்பிச் செய்தவன்—done with desire;
அதிசயம்—wonder
இன்தமிழ்—sweet Tamil
நாவலஊரன்—திருநாவலூர் என்ற ஊரவர்—சுந்தரர்—
Sundarar of ThiruNavalūr
வினை—deeds
பற்றறும்—will leave

He is enshrined at Thirukkūdalaiyatrūr with Uma having creeper like (tender) waist—He performed the sport (for my sake) with great fondness. This is a wonder—so finding Sundarar of Thiru Navalūr sang these ten verses. The deeds of those well versed in these verses will have no effect.

திருமுதுகுன்றம்

திருச்சிற்றம்பலம்

பொன்செய்த மேனியினீர் புலித்தோலை அரைக்கசைத்தீர்
Ponseydha mēnivineer pulith thōlai araikkasaithiheer
முன்செய்த மூவெயிலும் எரித்தீர் முதுகுன்று அமர்ந்தீர்
Munseydha mūveyilum eriththeer mudhukundru amarntheer
மின்செய்த நுண்ணிடையாள் பரவை இவள்தன் முகப்பே
Minseydha nunnnidaiyaall paravai ivallthan mugappē
என் செய்தவா(று) அடிகேள் அடியேன் இட்டளம் கெடவே
Enseydhavaarru adigell adiyen ittallam kedavē.

பொன் நிறம் பொருந்திய திருமேனியை உடையவரே! புலியின் தோலை இடுப்பில் அணிந்து கொண்டவரே! முன்தொல்லை செய்த மூன்று புரங்களையும் எரித்தவரே! திருமுதுகுன்றம் ஆகிய தலத்தில் உள்ளவரே! மின்னல் போன்ற நுட்பமான இடையை உடைய பரவை ஆகிய இவள் முன்னிலையில் அடியேனது துன்பம் கெடுமாறு நீர் என் செய்தீர்?

பொன் செய்த—பொன்போன்ற—golden
மேனி—உடல்—form—body
புலித்தோல்—skin of a tiger
அரை—இடுப்பு—waist
அசைத்தீர்—wore
முன்—formerly
மூ எயில்—three fortresses
எரித்தீர்—burnt
முதுகுன்று—விருத்தாசலம்—Vridhdhachalam—a place
அமர்ந்தீர்—were seated
மின்செய்த—மின்னல் போன்ற—like lightning
நுண்இடை—tender waist
நுண்இடையாள்—Uma having tender waist
பரவை—Paravai—the consort of Sundarar
இவள் தன் முகப்பு—இவள் முன்னிலையில்—in her presence
என் செய்தவாறு—what did you do?
அடிகேள்—Oh Lord
அடியேன்—I your devotee
இட்டளம்—distress
கெட—to go; releive

Oh Lord having golden body! Oh Lord wearing the tiger's skin on your waist! Oh Lord who burnt the three fortresses! Oh Lord who is enshrined at Vridhdhachalam! In the presence of Paravai having lightning—like tender waist, what have you done to relieve my distress?

பிறையாரும் சடை எம்பெருமான் அருளாய் என்று
Pirraiyaarum sadai emberumaan arullaay endru
முறையாய் வந்து அமரர் வணங்கும் முதுகுன்றர் தம்மை
Murraiyaai vandhu amarar vannangnm mudhukundrar thammai
மறையார் தம் குரிசில் வயல் நாவல் ஆரூரன் சொன்ன
Murraiyaar tham kurisil vayal naaval aarūran sonna
இறையார் பாடல் வல்லார்க்கு எளிதாம் சிவலோகம் அதே.
Irraiyaar paadal vallaarkku ellidhaam sivalōgam adhē.

திருச்சிற்றம்பலம்

"பிறை பொருந்திய சடையையுடைய எம்பெருமானே! திருவருள் செய்வாயாக! என்று முறையாகவந்து தேவர்கள் வணங்கும் விருத்தாசலத்தில் உள்ள கடவுளை,—

வேதம் வல்ல அந்தணர்களுக்குத் தலைவனும் வயல்கள் சூழ்ந்த திருநாவலூரினனும் ஆன ஆரூரன் என்னும் சுந்தரர் பாடினார்.

இறைவனது திருவருள் பொருந்திய இப்பாடல்கள் பாட வல்லவர்க்குச் சிவலோகம் எளிமையாகும்.

பிறை—crescent　　சடை—matted locks
எம்பெருமான்—my Lord!　　அருளாய்—bestow grace
முறையால்—one by one　　அமரர்—celestial
வணங்கும்—worshipping
முதுகுன்றர்—The Lord of Vriddhachalam
மறையார்—வேதம் வல்ல அந்தணர்—Brahmins well versed in Vedas
குரிசில்—தலைவன்—master　　வயல்—fields
நாவல்—நாவலூர்—Navalur—the place of Sundarar
ஆரூரன்—சுந்தரர்—Arūran name of Sundarar
சொன்ன—told—sung　　வல்லார்—well versed
இறை ஆர் பாடல்—songs of divine grace
எளிதுஆம்—easy to get　　சிவலோகம்—Sivalōka

"Oh Lord having the crescent at the matted locks! please bestow grace!"—so saying, the celestials come one by one and worship the Lord enshrined at Vridhdhachalam.

Him, Sundarar—the master of the Brahmins well versed in Vedas—belonging to Thiru Nāvalur—called also Aruran sang songs of divine grace. Those well versed in them will easily go to Sivaloka.

திருக்கடவூர் மயானம்

திருச்சிற்றம்பலம்

மருவார் கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோல
Maruvaar kondrai madhi sūdi maanikkaththin malai pōla
வருவார் விடைமேல் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
Varuvaar vidaimēl maadhōdu magizhndhu padaisuzhath
திருமால் பிரமன் இந்திரற்கும் தேவர் நாகர் தானவர்க்கும்
Thirumaal biraman indhirarkum dhēvar naagar thaana varkkum
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமான் அடிகளே.
Perumaan kadavūr mayaanaththup periya perumaan adigallē

வாசனை பொருந்திய கொன்றை மாலையையும் பிறையையும் சூடியவர்; வெள்ளி மலையின்மேல் ஒரு மாணிக்கமலை வருவது போல வருவார்; உமாதேவியோடு மகிழ்ந்து இருப்பவர்; பூதப் படைகள்சூழ இருப்பவர்; திருமால் பிரமன் இந்திரன் தேவர்கள் நாகலோகத் தலைவர் அசுரர்கள் ஆகியோர்க்கும் தலைவன் ஆவர்—அவர் திருக்கடவூர் மயானம் என்னும் தலத்தில் உள்ள பெரிய பெருமான் அடிகள் (சிவபெருமான்).

மரு—sweat—smelling
மதி—moon
மாணிக்கம்—ruby
மலை—mountain
வருவான்—will come
விடை—bull
மாது—பெண்—Lady (Uma)
பூதப்படை—the battalion of demons
சூழ—to surround
திருமால்—Vishnu
நாகர்—the inhabitants of the Nagalōka
தானவர்—அசுரர்—demons; a class of celestial musicians
பெருமான்—Lord
கடவூர்—a place
மயானம்—The name of the temple; This temple is towards the

east of the main temple at Thirukkadavur.
பெரிய பெருமானடிகள்—the great Lord

He wears the garland of KONRAI and the crescent; He comes as a mountain of ruby (on a white mountain); He is joyful with Uma; He is surrounded by a battalion of demons; He is the Lord of Vishnu, Brahma, Indra, the celestials, the Nagas, the giants—He is the great Lord enshrined at Kadavur Mayanam.

மாட மல்கு கடவூரில் மறையோர் ஏத்தும் மயானத்துப்
Mada malgu kada vūril marraiyor ēththum mayaanaththup
பீடை தீர அடியாருக்கு அருளும் பெருமான் அடிகள் சீர்
Peedai theera adiyaarkku arullum perumaan adigallseer
நாடி நாவல் ஆரூரன் நம்பி சொன்ன நல் தமிழ்கள்
Naadi naaval Aarūran nambi sonna nalthamizhgall
பாடும் அடியார் கேட்பார்மேல் பாவமான பறையுமே.
Paadum adiyaar kētpaar mēl paavamaana parraiyumē.

திருச்சிற்றம்பலம்

மாளிகைகள் பொருந்திய திருகடவூர் மயானத்தில் அந்தணர்களால் துதிக்கப்படுபவன்—அடியார்களுக்குத் துன்பம் தீர அருள் செய்பவன்—பெருமானடிகள்—இப்பெருமானுடைய புகழை ஆராய்ந்து, திருநாவலூரன்—ஆரூரன் நம்பி ஆகிய சுந்தரர் நல்ல தமிழ்ப் பாடல்கள் பாடியுள்ளார்—இப்பாடல்களைப் பாடும் அடியார்கள், கேட்கும் அடியார்கள்—இவர்கள் செய்த பாவம் நீங்கும்.

மாடம்—மாளிகை—mansion
மறையோர்—அந்தணர்—Brahmins
ஏத்தும்—புகழும்—adore
பீடை—distress
அடியார்—devotees
அருளும்—bestow grace
பெருமானடிகள்—the Lord
சீர்—புகழ்—fame
நாவல்—நாவலூரன்—சுந்தரர்—Navalūran—Sundarar
நல்—நல்ல—good; chaste
தமிழ்கள்—தமிழ்ப்பாடல்கள்—verses in Tamil
பாடும்—that sing
அடியார்—devotees
கேட்பார்—those that listen
பாவம்—sins
பறையும்—will leave

At Thirukkadavūr Mayanam, abound in mansions, He is adored by the Brahmins,— He bestows grace to the devotees removing their distress—He is the Lord.

Thiru Navalūran—Aruran—Nambi ie., Sundarar has sung His fame in chaste Tamil verses. Those who sing these verses or hear others sing will be relieved of their sins.

திருவஞ்சைக்களம்

திருச்சிற்றம்பலம்

தலைக்குத் தலைமாலை அணிந்தது என்னே
Thalaikkuth thalaimaalai annindhadhu enne
சடைமேல் கங்கை வெள்ளம் தரித்தது என்னே
sadaimel ganggai vellllam thariththathu enne
அலைக்கும் புலித்தோல் கொண்டு அசைத்தது என்னே
Alaikkum pulithth ol konndu asaiththathu enne
அதன்மேல் கதநாகக்கச்சு ஆர்த்தது என்னே
athanmel kadhanaagakkachchu aarththathu enne

மலைக்கும் நிகர்ஒப்பன வன் திரைகள்
Malaikkum nigar oppana van thiraigall
வலித்து ஏற்றி முழங்கிவலம் புரிகொண்டு
valiththu etri muzhangi valamburi konndu
அலைக்கும் கடலம் கரைமேல் மகோதை
Alaikkum kadalam karaimel makodhai
அணியார் பொழில் அஞ்சைக்களத்து அப்பனே.
anniyaar pozhil anjaikkallaththu appane.

தலைக்குத் தலைமாலையை அணிந்தது ஏன்?
சடையில் கங்கையாற்றைத் தாங்கியது ஏன்?
கொல்லும் புலியின் தோலை உடுத்தது ஏன்?
அதன்மேல் கோபம் உடைய பாம்பைக் கச்சுஆகக் கட்டியது ஏன்?

மலைக்கு ஒப்பான வலிமை பொருந்திய அலைகள் இழுத்து, மோதி, ஒலித்து, வலம்புரிச் சங்குகளைக் கரையில் சேர்க்கின்ற கடற்கரையில், மகோதை (என்னும் நகரத்தில்) உள்ளதும், அழகிய பொழில்கள் சூழ்ந்ததும் ஆன திருவஞ்சைக்களம் என்னும் கோயிலில் உள்ள தந்தையே!

தலை—head
அணிந்தது—wearing
சடை—matted locks
தரித்தது—wearing
புலி—tiger
அசைத்தது—wearing
கதம்—furious
கச்சு—girdle
மலை—mountain
தலைமாலை—chaplet
என்னே—why?
வெள்ளம்—flood (river)
அலைக்கும்—killing
தோல்—skin
அதன்மேல்—on it
நாகம்—serpent to wear;
ஆர்த்தது—encircle
நிகர்—equal
ஒப்பன—those that resemble each other
வன் திரைகள்—strong waves
வலித்து—catch hold of
மூழங்கி—to make noise
எற்றி—to dash
வலம்புரி—conch whose spirals turn to the right
அலைக்கும்—to know
கடல் அம்கரை—shore of the sea
மகோதை—Magōdhai, a place on the west coast of India; the place of a saint called Sēraman Perumall
அணி—beatuiful
பொழில் - groves
அஞ்சைக்களம்—name of the temple at Magodhai now it is the name of the place.
அப்பன்—(heavenly) father.

You wore a chaplet encircling your head—Why?
You had the Ganges on your matted locks—Why?
You robed yourself in the tiger's skin—Why?
Over it, You wore the furious serpent as girdle—Why?

The big mountain like waves, catch hold of conches and with great noise, throw them ashore at Magodhai. Oh (heavenly father enshrined at Angjaikkallam (at Magodhai) beautified by groves!

எந்தம் அடிகள் இமையோர் பெருமான்
Endham adigall imaiyor perumaan
எனக்கு என்றும் அளிக்கும் மணிமிடற்றன்
enakku endrum allikkum mannimidatran
அந்தண் கடலங் கரைமேல் மகோதை
Andhann kadalang karaimēl magòdhai
அணியார் பொழில் அஞ்சைக்களத்து அப்பனை
anniyaar pozhil anjaikkallaththu appanai

மந்தம் முழவும் குழலும் இயம்பும்
Mandham muzhavum kuzhalum iyambum
வளர்நாவலர்கோன் நம்பியூரன் சொன்ன
vallarnaava larkon nampiyūran sonna
சந்தம் மிகுதண் தமிழ்மாலைகள் கொண்டு
Sandham miguthann thamizh maalaigall koundu
அடிவீழ வல்லார் தடு மாற்றிலரே.
adiveezha vallaar thadu maatrilarē.

திருச்சிற்றம்பலம்

எம்முடைய தலைவன்; தேவர்களுக்குத் தலைவன்; எனக்கு எப்பொழுதும் அருள் செய்பவன்; அழகு பொருந்திய கண்டத்தை உடையவன். அழகிய, குளிர்ச்சி பொருந்திய கடற்கரையில் உள்ளது மகோதை—அம் மகோதையில் உள்ளது அஞ்சைக்களம் என்ற கோயில்—அது குளிர்ச்சி பொழில்கள் சூழ்ந்தது. அக் கோயிலில் இருப்பவன்.

(அத்தகையவனை) மந்தமாக முழாவும் குழலும் ஒலிக்கின்றதும் (நன்மை) வளர்கின்றதும் ஆன திருநாவலூரில் உள்ளவர்க்குத் தலைவன்—நம்பி ஆரூரன் ஆகிய சுந்தரர் சந்தம் பொருந்திய குளிர்ந்த தமிழ்ப் பாடல்களால் ஆகிய மாலையைப் பாடியுள்ளான். அப் பாடல்களைப் (பாடிக்) கொண்டு (சிவபெருமானது) திருவடியில் பணிய வல்லவர்கள் தடுமாற்றம் இல்லாதவர் ஆவர்.

எம்தம் அடிகள்—My Lord
இமையோர்—celestials
அளிக்கும்—bestow grace
பெருமான்—Lord
மணிமிடற்றன்—Siva having gemlike throat
அம்—beautiful
தண்—cool
கடல்அம்கரை—sea shore
அணி—beautiful
பொழில்—groves
அஞ்சைக்களத்து அப்பன்—the Lord enshrined at the temple called Thiru Angjaikkallam
மந்தம்—low (round)
முழவம்—drum
குழல்—flute
இயம்பும்—to sound
நாவலர் கோன்—ஊரன்—Sundarar
சந்தம்—musical
தண்—cool
தமிழ் மாலைகள்—garland of poetry
அடி—feet
வீழ—to fall at
தடுமாற்று—தடுமாற்றம்—embarrassment
இலர்—do not have

He is our Lord; He is the Lord of the celestials; He always bestows grace on me; He has gem like throat; He is in the temple called Angjaikkallam at Magōdhai on the beautiful cool sea shore, surrounded by groves.

Sundarar, the king of Thiru Navalūr, where the drums and flutes sound low—Nambi Aruran has sung a garland of verses, set in music. Those who fall at the feet of the Lord singing those versed have no embarrassment.

## மாணிக்கவாசகர்

திருச்சிற்றம்பலம்

மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன்விரையார் கழற்குஎன்
Meydhaan arumbi vidhirvidhirththu unviraiyaar kazharkuen
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம்
Kaidhaan thalaivaiththuk kannnneer thadhumbi vedhumbi ullllam
பொய்தான் தவிர்ந்து உன்னைப்போற்றி சயசய போற்றிஎன்னும்
Poydhaan thavirndhu unnaip pōtri sayasaya pōtri ennum
கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக்கண்டு கொள்ளே.
Kaidhaan negizha vidēn udaiyaay ennaik kanndukollllē.

உடம்பு மயிர்க்கூச்செறிந்து, நடுங்குகிறது; உன் நறுமணம் பொருந்திய திருவடிகளுக்குக் கை தலைமேல் வைத்து (வணக்கம் செலுத்துகிறேன்); கண்ணீர் ததும்புகிறது; உள்ளம் வெதும்புகிறது பொய் நீங்கி உன்னைப் போற்றுகிறது; சயசய போற்றி என்னும் முயற்சியை (நான்) நெகிழ விடமாட்டேன்; என்னை உடையவனே என்னை ஏற்றுக்கொள்.

மெய்—உடம்பு—body
அரும்பி—மயிர்க்கூச்செறிந்து—with horripilation
விதிர்விதிர்த்து—quiver விரை—fragrant
கழல்- anklet—feet
கைதான் தலைவைத்து—hands folded over the head
கண்ணீர்—tears ததும்பி—gushing
வெதும்பு—to be disturbed in mind
பொய்—falsehood தவிர்ந்து—abandon
போற்றி—Hail சயசய—Victory
கை—முயற்சி—endeaver
நெகிழ விடேன்—never shall I slip away
உடையாய்—Oh possessor of myself!

The body with horripilation quivers; To your fragrant (flowerlike) anklet feet I (make a bow) with hands folded over my head with tears gushing. The mind becomes disturbed and

shuns falsehood. "Hail! Victory! Victory! Hail"—The endeavour to say so I donot forsake. O Possessor of myself! Please look at me.

கொள்ளேன் புரந்தரன் மால் அயன் வாழ்வு; குடிகெடினும்
Kollllēn purandharan maal ayan vaazhvu; kudikedinum
நள்ளேன் நினது அடியாரொடு அல்லால்; நரகம் புகினும்
Nallllēn ninadhu adiyaarodu allaal naragam puginum
எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின்; இறைவா,
Ellllēn thiruvarullaalē irukkap perrin irraivaa
உள்ளேன் பிறதெய்வம் உன்னை அல்லாது; எங்கள் உத்தமனே;
Ullllēn pirradheyvam unnai allaadhu engall uththamanē.

திருச்சிற்றம்பலம்

இந்திரன், திருமால், பிரமன் ஆகிய இவர்தம் பதவிகளையும் யான் விரும்பேன். என் குடி செடுவதாக இருந்தாலும், உன் அடியவரோடு தவிர்த்துப் பிறரோடு சேரமாட்டேன். உன் திருவருளாலே நகரத்தில் போய் இருப்பதாயினும், அதனை வெறுக்க மாட்டேன்; கடவுளே! உன்னை அல்லாமல் வேறு தெய்வங்களை நினைக்கமாட்டேன். எங்கள் சிறந்த கடவுளே!

கொள்ளேன்—I take not (I donot like) மால்—Vishnu
அயன்—பிரமன்; Brahma வாழ்வு—position
குடிகெடினும்—if my family should be ruined
நள்ளேன்—I do not associate with
அடியாரொடு—with your devotees நரகம்—hell
எள்ளேன்—I donot despise திருவருளால்—by your grace
இறைவா—Oh Lord! உள்ளேன்—I think not
பிறதெய்வம்—Other Gods உத்தமனே—Oh perfect one!

I do not like to take up the position of Indra, Vishnu or Brahma. Even if my family should be ruined, I do not associate with any other than your devotees. Even if I should enter the hell, destined by your grace, I despise it not. Oh Lord! Except Yourself I do not think of any other god. Oh Perfect one!

திருச்சதகம்

திருச்சிற்றம்பலம்

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
Velllan thaazh virisadaiyaay vidaiyaay vinnnnor
பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
Perumaanē enakkēttu vētta nen jaayp
பள்ளந்தாழ் உறுபுனலில் கீழ்மே லாகப்
palllan thaazh urrupunalil keezhmē laagap
பதைத்துருகும் அவர் நிற்க என்னை ஆண்டாய்க்கு
padhaiththurugum avar nirrka ennai aanndaaykku
உள்ளந்தாள் நின்று உச்சி அளவும் நெஞ்சாய்
ullllanthaall nindru uchchi allavum nenjaay
உருகா தால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா
Urugaa dhaal udambellaam kannnnaay annnnaa
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
Vellllanthaan paayaadhaal nenjang kallaam
கண்ணை இணையும் மரமாம் தீ வினையி னேற்கே.
Kannai innaiyum maramaam thee vinaiyinērrkē.

"கங்கை தங்கிய பிரிந்த சடையுடையவனே! இடபத்தை ஊர்பவனே! தேவர்களுக்குத் தலைவனே!' என்று அடியார் விளித்தார்கள். அதைக்கேட்டு விரும்பிய நெஞ்சு உடையவர் ஆயினர்; பள்ளத்தை நோக்கிச் செல்லும் பெரிய வெள்ளம் போலத் தடுமாறிப் பதைத்து உருகினர் (சிலர்); அவர் இருக்கும் பொழுது நீ என்னை ஆண்டாய்; உனக்காக, என் உள்ளம் கால் முதல், உச்சம் தலைவரையில் நெஞ்சு ஆகி, உருக வில்லையே! உடம்பு முழுவதும் கண் ஆகி, இறைவனே! கண்ணீர் வெள்ள மாகப் பாயவில்லையே! என்நெஞ்சு கல் ஆகிறது; இரண்டு கண் களும் மரம் ஆக இருக்கிறது—தீயவினை செய்த எனக்கு!

வெள்ளம்—flood (Ganges)
விரிசடை—spreaded matted locks
விண்ணோர் பெருமான்—the Lord of the celestials
கேட்டு—having
வேட்ட—விரும்பிய—earnest desire
நெஞ்சு—mind
உறுபுனல்—மிக்கவெள்ளம்—high flood
தலைகீழாக—in an inverted position; in confusion
பதைத்து—deeply agitated
உருகுமவர்—those who melt

ஆண்டாய்—you graced me
தாள் நின்று—from the leg
உருகாது—does not melt
உடம்பு—body
பாயாது—does not flow
கண் இணை—twain eyes
தீவினை—evil deeds
உள்ளம்—mind
உச்சி அளவு—up to the crown of the head
அண்ணா—Oh Lord!
கல்—stone
மரம் ஆம்—woody

"Oh Lord having the Ganges in the spreaded matted locks! Oh Lord riding a bull! Oh Lord of the celestials!—so adored (some devotees); Hearing those words, the mind of some longed earnestly for Him and like water rushing towards low level rushed and began to melt in confusion. While, such (devotees) are there, You graced me. But my mind does not melt from the leg to the crown of the head. The whole body does not become eyes and shed flood of tears. Oh Lord, my mind has become stony; the twain eyes have become woody-to me who has done evil deeds.

தேவர் கோ அறியாத தேவ தேவன்
Dhēvar kō arriyaadha dhēva dhēvan
செழும் பொழில்கள் பயந்து காத்து அழிக்கும் மற்றை
Sezhum pozhilgall payandhu kaaththu azhikkum matrai
மூவர்கோன் ஆய் நின்ற முதல்வன் மூர்த்தி
Mūvarkōn aay nindra mudhavan mūrththi
மூதாதை மாதாளும் பாகத்து எந்தை
Mūdhaadhai Maadhaallum Baagaththu Endhai
யாவர்கோன் என்னையும் வந்து ஆண்டு கொண்டான்
Yaavarkōn ennaiyum vandhu aanndu konndaan
யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
Yaamaarkkum kudiyallōm yaadhum anjōm
மேவினோம் அவனடியார் அடியாரோடு
mēvinōm avanadiyaar adiyaarōdu
மேன்மேலும் குடைந்தாடி ஆடுவோமே
mēnmēlum kudaindhaadi aaduvōmē

திருச்சிற்றம்பலம்

தேவர்களுக்குத் தலைவன் ஆகிய இந்திரனாலும் அறிய முடியாத தேவதேவன், செழுமையான உலகங்களைத் தோற்றுவித்து, காத்து, அழிக்கிறான்; அவன் பிரமன், திருமால், உருத்திரன் என்று மூவராக நின்ற முதல்வன்; மூர்த்தி; முதாதை; உமையை ஒரு பாகத்தில் கொண்ட எம் தந்தை; எல்லோருக்கும் இறைவன்; என்னை வந்து ஆட்கொண்டான்; (ஆகையால்) யாம் யாருக்கும் குடியல்லோம்; எதற்கும் பயப்பட மாட்டோம்; அவன் அடியாருக்கு அடியாரோடு சேர்ந்தோம்; மேலும் மேலும் கருணை நீரில் இறங்கி விளையாடுவோம்.

தேவர்கோ—இந்திரன்—Indra
அறியாத—not perceived தேவ தேவன்—Lord of the celestials
செழும்—fertile
பொழில்கள்—உலகங்கள்—Worlds பயந்து—creation
அழிக்கும்—dissolve காத்து—protected
மூவர்கோன்—மும்மூர்த்திகள்—The triad Brahma, Vishnu and Rudra
முதல்வன்—the primal one மூர்த்தி—the Lord
முதாதை—the grand father
மாது—பெண்—உமை—Lady—Uma பாகம்—part
எந்தை—my (heavenly) father
யாவர்கோன்—the Lord of all
ஆண்டு கொண்டான்—graced me
ஆர்க்கும்—யார்க்கும்—for any one
குடி அல்லோம்—not a subject
யாதும்—anything அஞ்சோம்—we fear not
மேவினோம்—approched; mingled with அடியார்—devotees
குடைந்து ஆடுவோம்—bathe by immersion
மேன்மேலும்—more and more

He is the Lord of the celestiais unperceived (even) by Indra. He creates, protects and dissolves the worlds. He is the primal one who stood in the form of the Triad—Brahma, Vishnu and Rudra. He is the Lord and my (heavenly) Grand father. He is my (heavenly) Father who holds the Lady (Uma) in His part. He is the Lord of all. He graced me. We are not the subject

of any one; We fear not anything. We have mingled with the devotees of His devotees. More and more we shall bathe by being immersed in the ocean of grace.

கோயில் திருப்பதிகம்

திருச்சிற்றம்பலம்

அன்பினால் அடியேன் ஆவியோடு யாக்கை
Anbinaal adiyēn aaviyodu yaakkai
ஆனந்த மாய்க் கசிந்து உருக
aanandha maayk kasindhu uruga
என்பரம் அல்லா இன்னருள் தந்தாய்
Enparam allaa innarull thandhaay
யானிதற்கு இலனோர் கைம்மாறு
yaanidharrku ilanor kaimmaarru
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
Munbumaayp pinbu muzhudhumaayp parandha
முத்தனே முடிவிலா முதலே
muththanē mudivilaa mudhalē
தென்பெருந் துறையாய் சிவபெருமானே
Thenperun thurraiyaay sivaperumaanē
சீருடைச் சிவபுரத் தரைசே.
seerudaich sivapurath tharaisē.

அன்புகொண்டு அடியேனுடைய உயிரும் உடம்பும் மகிழ்ச்சியோடு கரைந்து உருகுமாறு, என்னால் பெறமுடியாத இனிமையான திருவருளைக் கொடுத்தாய். இதற்கு நான் ஒரு பதில் உதவியும் செய்ய முடியாது. எல்லார்க்கும் முன்னவனாய், முழுப்பொருளாய்ப் பரவி உள்ள முத்தி வடிவுஆனவனே! முடிவு இல்லாத முதல்வனே! தெற்கில் உள்ள திருப்பெருந்துறை என்னும் தலத்தில் உள்ளவனே! சிவபெருமானே! சிறப்புப் பொருந்திய சிவபுரத்துக்கு அரசனே!

அன்பு—love; affection
அடியேன்—I, your devotee
ஆவி—உயிர்—life; soul
யாக்கை—உடம்பு -body
ஆனந்தம்—மகிழ்ச்சி—joy
கசிந்துஉருக—கரைய—to melt
என்பரம் அல்லா—என்னால் பெற முடியாத—that cannot be attained by me; that is beyond my control

இன்னருள்—grace
யான் இலன் ஓர் கைம்மாறு—I have nothing to recompense
முன்பு—anterior பின்பு—posterior
முழுதும்—entirely, whole பரந்த—spreading
முத்தன்—முத்திதருபவன்—Lord -who awards bliss
முடிவிலா—endless முதல்—the first; primal one
தென்பெருந்துறையாய்—Oh Lord of Thirupperunthurai in the south!
சிவபெருமானே—Oh Lord Siva!
சீர்—சிறப்பு—renowned அரைசு—King

You showed affection to me; my soul and my body, with ecstatic joy, to melt, you bestowed grace, that cannot be attained by me. I have nothing to recompense. You are the anterior; you are the posterior; you are the entirety; Thus you have spread yourself. Oh bestower of bliss! Oh the endless and primal one! Oh Lord of Thirupperunthurai in the south! Oh Lord Siva! Oh King of renowned Sivapuram!

தந்ததுஉன் தன்னைக் கொண்டதுஎன் தன்னைச்
Thandhadhu unthannaik konndadhuen thannaich
சங்கரா ஆர்கொலோ சதுரர்
Sankaraa aarkolo sadhurar
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
Andham ondru illaa aanandham petrren
யாதுநீ பெற்றது ஒன்று என்பால்
yaadhunee petradhu ondru enpaal
எந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
Endhaiye koyil konnda emperumaan
திருப்பெருந் துறையுறை சிவனே
thirupperun thurraiyurrai sivanē
எந்தையே ஈசா உடல்இடங் கொண்டாய்
Endaiyē eesaa udalidang konndaay
யான் இதற்கு இலனோர் கைம்மாறே.
yaan idharrku ilanor kaimmaarre.

திருச்சிற்றம்பலம்

தந்தது உன்னை; கொண்டது என்னை; சங்கரனே! யார் சாமர்த்தியம் உடையவர்? முடிவு இல்லாத ஆனந்தத்தைப்

பெற்றேன்; நீ என்னிடம் எதனைப் பெற்றாய்? என் மனத்தையே கோயிலாகக் கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறையில் உள்ள சிவபெருமானே! என் தந்தையே! ஈசனே! என் உடம்பை நீ இடமாகக் கொண்டாய்; நான் இதற்குப்பதில் செய்ய முடியாத வனாக இருக்கிறேன்.

தந்தது—gave
கொண்டது—took
சங்கரா—Oh Sankara
ஆர்—யார்—who
சதுரர்—intelligent one
அந்தம்—இறுதி—end
ஆனந்தம்—joy
பெற்றேன்—I got
யாது—What
பெற்றது—that was obtained
சிந்தை—மனம்—mind
கோயில்—temple
எம் பெருமான்—my Lord
எந்தையே—Oh my (heavenly) father
உடல்—body
இடம்—place

You offered yourself; You took myself; Oh Sankara! who is the intelligent one? I got infinite bliss! (In turn) what did you get from me? Oh Lord who made my mind your temple! Oh Lord Siva who is enshrined at Thirupperunthurai! Oh my (heavenly) Father! Oh Easa! you made my body your abode! I have nothing to recompense.

திருப்பள்ளி எழுச்சி

திருச்சிற்றம்பலம்

போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே
Potri en vaazhmudhal aagiya porullē
புலர்ந்தது பூங்கழற்கு இணைதுணை மலர்கொண்டு
pularndhadhupūnggazharrku innaithunnaimalarkonndu
ஏற்றிநின் திருமுகத்து எமக்கருள் மலரும்
Etrinin thirumugaththu emakkarull malarum
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
ezhilnagai konndunin thiruvadi thozhugōm
சேற்றிதழ்க் கமலங்கள் மலரும்தண் வயல்சூழ்
Setridhazhk kamalanggall malarum thannvayalsūzh
திருப்பெருந் துறைஉறை சிவபெருமானே
thirupperum thurraiurrai sivaperumaanē

ஏற்றுயர் கொடியுடையாய் எனையுடையாய்
Etruyar kodiyudaiyaay enai yudaiyaay
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே.
emberumaan palllli ezhundharullaaye.

என் வாழ்வுக்கு முதல் ஆக இருக்கிற பெருமானே! (பொழுது) விடிந்தது; பூப்போன்ற—கழல் அணிந்த—உன் இரண்டு திருவடிகளுக்கு மலர்களைத் தூவி ஏத்துகிறேன். உன் திருமுகத்து அழகிய புன்னகையைப் பார்த்து உன் திருவடிகளைத் தொழுகிறோம். சேற்றில் தோன்றும்—இதழ்களை உடைய—தாமரைகள் மலர்கின்ற குளிர்ந்த வயல்கள் சூழ்ந்தது திருப்பெருந்துறை; அத்தலத்தில் இருக்கிற சிவபெருமானே! உயர்ந்த இடபக்கொடியை உடையவனே! என்னை (அடிமையாக) உடையவனே! எம்பெருமானே! பள்ளிகொள்வதில் இருந்து எழுவாயாக!

வாழ்வு—life
முதல்—capital
பொருள்—Lord
புலர்ந்தது—dawned
பூ—flower like
கழல—anklet (feet)
இணை—twain
துணை—twain
மலர்—flowers
ஏற்றி—strew
திருமுகம்—holy face
அருள்—grace
எழில்நகை—beautiful smile
திருவடி—holy feet
தொழுவோம்—we shall worship
சேறு—mud
இதழ்—petals
கமலங்கள்—lotuses
மலரும்—flowering
வயல்—fields
ஏற்று உயர்கொடி—bull banner
எனை உடையாய்—Oh possessor of myself!
எம்பெருமான்—Oh myLord
பள்ளி எழுந்தருளாய்—please wake up.

Oh Lord who is the capital of my life! Hail. It is now dawn; To your lotus feet, I strew flowers (and adore). Seeing your smile in your face that bestows grace, we worship your holy feet. Thirupperunthurrai is surrounded by fields where the petalled lotuses blossom. Oh Lord Siva enshrined at Thirupperunturrai! Oh Lord having the bull banner! Oh possessor of myself! Oh my Lord! Please wake up!

புவனியில் போய்ப் பிறவாமையில் நாள்நாம்
Buvaniyil pōyp pirravaamaiyil naallnaam
போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி
pokkugindrom avame indha Būmi
சிவனுய்யக் கொள்கின்றவாறு என்று நோக்கித்
Sivanuyyak kollgindravaarru endru nokkith
திருப்பெருந்துறை உறைவாய் திருமாலாம்
thirupperum dhurrai urraivaay thirumaalaam
அவன் விருப்பு எய்தவும் மலரவன் ஆசைப்
Avan viruppu eydhavum malaravan aasaip
படவும் நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும்
padavum nin alarndha meykkarunnaiyum neeyum
அவனியில் புகுந்து எமை ஆட்கொள்ள வல்லாய்
Avaniyil pugundhu emai aatkolla vallaay
ஆரமுதே பள்ளி எழுந்து அருளாயே.
aaramudhe pallli ezhundhu arullaaye.

திருச்சிற்றம்பலம்

திருப்பெருந்துறையில் இருப்பவனே! "இந்த நில உலகத்தில் போய்ப் பிறக்காமல் நம்முடைய நாட்களை வீணாகக்கழிக்கிறோம்; இந்தப்பூமி சிவன் நம்மை ஆட்கொள்வதற்கு உரியவழி" — என்று பார்த்துத் திருமால் விருப்பத்தை அடைகிறான்; பிரமன் ஆசைப் படுகிறான்; உன் கருணையும் (அருட் சக்தியும்) நீயும் உலகத்தில் புகுந்து எங்களை ஆட்கொள்ள வல்லமை உடையை! அரிய அமுதமே! பள்ளி கொள்வதனின்று எழுவாயாக.

புவனி—earth
பிறவாமை—not taking birth
நாள்—days
அவமே போக்குகின்றோம்—spending; wasting
பூமி—earth
உய்ய—to be redeemed
ஆறு—way
நோக்கி—seeing
திருமால்—Vishnu
விருப்பு—ஆசை—liking
மலரவன்—பிரமன்—Brahma
அலர்ந்த—blossoming—bestowing
மெய்—true
கருணை—grace
மெய்க்கருணை—அருள்சக்தி—Uma
அவனி—earth
ஆட்கொள்ள—to bless
புகுந்து—to enter (condescend)

Oh Lord enshrined at Tirupperunthurai!" Not taking birth in the earth, we are wasting our time; The earth is the way to obtain the grace of Siva".—so saying, Vishnu longs for and Brahma too. OhLord capable of condescending on earth with the true grace (Uma) and bestow grace on us. Oh rare ambrosia! Please wake up!

நீத்தல் விண்ணப்பம்

திருச்சிற்றம்பலம்

கடையவ னேனைக் கருணையினால்
Kadaiyava nēnaik karunnaiyinaal
கலந்து ஆண்டு கொண்ட
kalandhu aanndu konnda
விடையவனே விட்டிடுதி கண்டாய்
Vidaiyavanē vittidudhi kanndaay
விறல் வேங்கையின் தோல்
virral venggaiyin thōl
உடையவ னேமன்னும் உத்தர
Udaiyavanē mannum uththara
கோசமங் கைக்கு அரசே
kōsa manggaikku arasē
சடைய வனே தளர்ந்தேன் எம்பிரான்
Sadaiyavanē thallarndhēn embiraan
என்னைத் தாங்கிக் கொள்ளே.
ennaith thaanggik kollllē.

கடைசியில் இருக்கும் என்னை, கருணையால் கலந்து ஆண்டு கொண்டவனே! எருதை வாகனமாக உடையவனே! என்னை விடாதே! வலிமை பொருந்திய புலித்தோலை உடுத்திக் கொண்டவனே! நிலைபெற்ற உத்தரகோச மங்கை என்னும் தலத்துக்கு அரசே! சடை உடையவனே? தளர்ச்சி அடைந்தேன். எம் பெருமானே! என்னைத் தாங்கிக் கொள்வாயாக!

கடையவனேன்—the lower most கருணையினால்—by grace
கலந்து—intermixed; mingled
விடையவனே—Oh rider of a bull
விட்டிடுதி—(Don't) forsake me! கண்டாய்—expletive
விறல்—வலிமைபொருந்திய—strong

வேங்கையின் தோல்—புலித்தோல்—tiger's skin
உடையவன்—possessor
மன்னும்—நிலைபெற்ற—eternal    அரசு—king
சடையவன்—one with matted locks
தளர்ந்தேன்—became exhausted
தாங்கிக்கொள்—hold me up

I am the lower most one. By grace you mingled with me and took me under your guardianship. Oh rider of a bull! Forsake me not. Oh Lord who is robed in tiger's skin! Oh King of the eternal Uththara Kosamangai! Oh Lord with matted locks! I have become exhausted. Oh my Lord! Please hold me up.

ஏசினும் யான் உன்னை யேத்தினும்
Ēsinum yaan unnai yēththinum
என் பிழைக்கே குழைந்து
en pizhaikkē kuzhaindhu
வேசறு வேனை விடுதி கண்டாய்
Vēsarru vēnai vidudhi kanndaay
செம் பவள வெற்பின்
sem pavalla verrpin
தேசுடை யாய் என்னை ஆளுடை
Thēsudaiyaay ennai aaludai
யாய் சிற்றுயிர்க்கு இரங்கிக்
yaay sitruyirrkku irangik
காய்சின ஆலமுண் டாய்
kaaysina aala unndaay
அமுது உண்ணக் கடையவனே.
Amudhu unnnak kadaiyavanē

திருச்சிற்றம்பலம்

உன்னை இகழ்ந்து பேசினாலும், புகழ்ந்தாலும் நான் செய்யும் பிழைகளுக்கு மனம கரைந்து வருந்துகிறேன்; என்னை விடாதே! சிவந்த பவழ மலையின் ஒளி உடையவனே! என்னை ஆட் கொண்டவனே! சிறிய உயிர்கள் ஆகிய தேவர்கள் அமுதம் உண்ணுவதற்காக மனம் இரங்கி வருத்துவதும் கோபம் உடையதுமான விஷத்தை உண்டவனே! யான் கடையவன்.

ஏசினும்—(even though I) defame
ஏத்திநும்—whether I praise
குழைந்து—melt
விடுதி—forsake me (not)
வெற்பு—mountain
சிற்றுயிர்—low creatures—the celestials
ஆலம்—poison
பிழை—sin
ஏசறுவேன்—I repent
செம்பவளம்—red coral
தேசு—brightness
இரங்கி—pitying
உண்டாய்—devoured

Although I defame you or praise you, I repent for my sins and melt. Forsake me not! Oh Lord having the brightness of a coral mountain! Oh Lord who took me under your guardianship! Oh Lord who devoured poison for the sake of puny creatures (the celestials).

திருப்படையாட்சி

திருச்சிற்றம்பலம்

கண்கள் இரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன ஆகாதே.
Kanngall iranndum avan kazhal kanndu kallippana aagaadhe
காரிகையார்கள் தம்வாழ்வில் என் வாழ்வு கடைப்படும் ஆகாதே
kaarigaiyaargall thamvaazhvil envaazhvu kadaippadum aagaadhe
மண்களில் வந்து பிறந்திடுமாறு மறந்திடும் ஆகாதே
Mangallil vandhu pirrandhidumaarru marrandhidum aagaadhe
மால் அறியா மலர்ப்பாதம் இரண்டும் வணங்குதும் ஆகாதே
maalarriyaa malarp paadham iranndum vannangudhum aagadhe
பண்களிகூர்தரு பாடலொடு ஆடல் பயின்றிடும் ஆகாதே
Pann kallikūrtharu paadalodu aadal payindridum aagaadhe
பாண்டி நன்னாடு உடையான் படை ஆட்சிகள் பாடுதும் ஆகாதே
paanndi nannaadu udaiyaan padaiaatchigall padudhum aagaadhē
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படும் ஆகாதே
Vinnkalli kūrvadhor vedthagam vandhu vellippadum aagaadhē
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படும் ஆயிடிலே
meenvalai veesiya kaanavan vandhu vellippadum aayidilē

திருச்சிற்றம்பலம்

என் இரண்டு கண்களும் அவனுடைய திருவடிகளைப் பார்த்து மகிழும் அல்லவா? பெண்கள் வாழ்வு கணவன் வழிச்செல்லும்

தன்மை உடையது; அதுபோல் என் வாழ்வும் இறை வழியில் செல்வதாக ஆகும் அல்லவா? மண் உலகில் வந்து பிறத்தல் என்பதை மறக்கலாம் அல்லவா? திருமால் அறியாத மலர்போன்ற திருவடிகள் இரண்டையும் வணங்கலாம் அல்லவா? இசை பொருந்தி மகிழ்ச்சி தருவது பாடல்; அவற்றுடன் நடனம் ஆடுவதும் நடைபெறும் அல்லவா? நல்ல பாண்டிய நாட்டையே தனது நாடாக உடையவன் சிவபெருமான்; அவனுடைய தொண்டர் கூட்டத்தைப் பாடலாம் அல்லவா? தேவர்களும் மகிழும் படி திருவருட் செயல்கள் என் இடம் வெளிப்படும் அல்லவா? வலைவீசி மீன்களைப் பிடிக்கும் செம்படவன் ஆகவந்த இறைவன் மறுபடியும் வெளிப்பட்டு வந்து அருள் செய்தால்.

களிப்பன—மகிழும்—will feel glad (or) be joyfull
ஆகாதே—will it not
காரிகையார்கள்—பெண்கள்—women
வாழ்வு—life  ஊடைப்படும்—follow
மண்கள்—earth  பிறந்திடுமாறு—way of birth
மறந்திடும்—will forget  மலர்ப்பாதம்—flower like Feet
வணங்குவதும்—bow down/ worship
பண்—இசை—music
களிகூர்தரு——மகிழ்ச்சி தருகிற—that gives pleasure
பாடல்—song  ஆடல்—dance
பயின்றிடும்—perform  நன்னாடு—good country
படை ஆட்சிகள்—army (of the devotees)
பாடுதும்—sing  விண்—heaven
களிகூர்வது—feel pleasure
வேதகம்—acts of grace; mystic Feet  மீன்—fish
வெளிப்படும்—should appear  வீசிய—casting
வலை—net  கானவன்—செம்படவன்—fisherman

Would not my two eyes see His Anklet Feet and feel joyful? The life of ladies is to follow the path of their husbands; likewise, would not my life follow the Lord's path? Would not I forget the way of birth in this earth? Would not I worship His two Flower like Feet not seen by Vishnu? Would not I perform the dance with musical songs that give pleasure? Would not I

sing in praise the army of the devotees of the Lord who own the Pandya country? Would not acts of grace (of the mystic Feet of the Lord) be visible?—If the Lord who came in the form of a fisherman and cast His net, should appear once again!

சங்கு திரண்டு முரன்று எழும் ஓசை தழைப்பன ஆகாதே
Sangu thiranndu murandru ezhum ōsai thazhaippanaa agaadhē
சாதி விடாத குணங்கள் நம்மோடு சலித்திடும் ஆகாதே
saadhi vidaadha gunnangallnammōdu saliththidum aagaadhē
அங்கிது நன்றிது நன்று எனும் மாயை அடங்கிடும் ஆகாதே
angidhu nandridhu nandru enum maayai adangidum aagaadhē
ஆசை எலாம் அடியார் அடியோம் எனும் அத்தனை ஆகாதே
aasai elaam adiyaar adiyōm enum aththanai aagaadhē
செங்கயல் ஒண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன ஆகாதே
sengkayal onnkann madandhaiyar sindhai thillaippana aagaadhē
சீர் அடியார்கள் சிவானுபவங்கள் தேர்ந்திடும் ஆகாதே
seer adiyaargall sivanubhavangall thērndhidum aagaadhē
எங்கும் நிறைந்து அமுது ஊறு பரஞ்சுடர் எய்துவது ஆகாதே
engum nirraindhu amudhu ūrru paranchudar eydhuvadhu aagaadhē
ஈறுஅறியா மறையோன் எனை ஆளஎழுந்தருளப் பெறினே.
eerru arriyaa marraiyōn enai aallaezhundharullaap perrinē.

திருச்சிற்றம்பலம்

சங்குகள் சேர்ந்து ஒலிப்பதால் தோன்றுகிற ஓசை மிகும் அல்லவா? சாதியைப் பற்றிக்கொண்டு விடாத குணங்கள் நம்மிடம் தளர்ச்சி அடையும் அல்லவா? (தளர்ச்சி அடைந்தபொழுது) "இது நல்லது, இது நல்லது" என்ற மாயை அடங்கும் அல்லவா? (எமக்கு உள்ள) ஆசை முழுவதும் "அடியார்களுக்கு அடியோம்" என்ற அந்த அளவே அல்லவா? சிவந்த கயல் போன்ற ஒளி பொருந்திய கண்களையுடைய பெண்களைச் சிந்தையில் திளைப்பது ஆகாது அல்லவா? சிறந்த அடியார்களின் சிவானுபவங்கள் நமக்கும் நன்கு தெரியும் அல்லவா! எல்லா இடங்களிலும் நிறைந்து அமுதம் ஊறும் பரஞ்சுடர் ஆகிய பெருமான் நம்மை வந்து அடையும் அல்லவா? ஈறு இல்லாத அந்தணன் (ஆகிய சிவபெருமான்) எனை ஆள்வதற்கு எழுந்தருள்வதாயின்.

சங்கு—conch
திரண்டு—gathering
முரன்று எழும்—sounding
ஓசை—sound
தழைப்பன—will flourish
சாதி—caste

விடாத—not leaving
குணங்கள்—characteristics
சலித்திடும்—withered
நன்று—good
மாயை—delusion
அடங்கிடும்—will become suppressed
ஆசை—desire
எலாம்—all
அடியார் அடியோம்—devotee of devotees
அத்தனை—that much
கயல்—'Kayal'—fish
ஒண்கண்—bright eyes
மடந்தையர்—damsels
சிந்தை—mind
நினைப்பன—think
சீர் அடியார்கள்—great devotees
சிவானுபவங்கள்—Siva experiences
தெரிந்திடும்—will be well known
எங்கும் நிறை—all pervading
அமுது—ambrosia
ஊறும்—to flow
பரஞ்சுடர்—Lord as light resplendent
எய்துவது—to reach
ஈறு—end
அறியா—unknown
மறையோன்—the Lord
ஆள—to bless
எழுந்தருளப்பெறின்—if (He) should com

Would not the sound of conchesgathered together abound*. Would not the characteristics which does not leave the castes get withered in us? Would not the delusion which leads to say "This is good, this is good" also get suppressed? Would not our longing be, "We are the devotees of His devotees"? Would not our mind be devoid of the thought of damsels having red kayal fish like—shining eyes? Would not the Siva experiences of the devotees become well known to us? Would not the Light—resplendent—all pervading Lord with a flow of ambrosia reach us.

—If the Lord whose end is unknown should come to bless me.

---

* This has a mystic yogic meaning of hearing a humming noise in Yoga!

# பொருளடக்கம்—CONTENTS

## திருஞானசம்பந்தர்

## Thirugnanasambandar



## திருநாவுக்கரசர்

## Thirunavukarasar

## சுந்தரர்

## Sundarar



## மாணிக்கவாசகர்

## Manickavasagar